மலர் 15 இதழ் 206

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190 76189



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 9—4—75 புதன்  வெளியூர் 10—4—75 வியாழன்

**கோவிலில் திடீர் சோதனை: சட்டசபையில் மந்திரி தகவல்**

2-ம் பக்கம்

# "நீதி விசாரணை கேட்பார்கள் வைத்தால் ஓடுவார்கள்"

# சட்டசபையில் கருணாநிதி பேச்சு

## அண்ணா தி. மு. க. வெளிநடப்பு பற்றி கருத்து

**சென்னை, ஏப். 9—அண்ணா தி. மு. க.வினர் நீதி விசாரணை கேட்பார்கள்; வைத்தால் ஓடுவார்கள் என்று இன்று சட்டசபையில் முதலமைச்சர் கருணாநிதி கூறினார்.**

அமைச்சர் ப. உ. சண்முகம் விவகாரம் சம்பந்தமாக இன்று சட்டசபையில் அண்ணா தி. மு. க.வினர் வெளிநடப்பு செய்தபோது முதலமைச்சர் மேற்கண்டவாறு தெரிவித்தார்.

நீதி விசாரணைக்கு ஆளான அமைச்சர் ப. உ. சண்முகம் அமைச்சர் பதவியிலிருந்து ராஜினமா செய்யவேண்டும் என்ற கோரிக்கையை இன்று சட்டசபையில் கேள்வி நேரம் முடிந்ததும் எதிர்க்கட்சியினர் எழுப்பினார்கள்.

இதையொட்டி சட்டசபையில் ஏராளமான ஒழுங்குப் பிரச்னைகள் எழுப்பப்பட்டன. சபையில் சூடான விவாதமும் கூச்சலும் ஏற்பட்டது.

அமைச்சர் ப. உ. சண்முகம் ராஜினமா செய்யாததை எதிர்ப்பதாகத் தெரிவித்து அ. தி. மு. க.வினர் இறுதியில் வெளிநடப்பு செய்தனர்.

கேள்வி நேரத்தின் போது சபையில் இருந்த ப. உ. சண்முகம் இந்த விவாதம் நடந்த போது சபையில் இல்லை.

ப. உ. சண்முகம் விவகாரத்தை கோவை செழியன் (அ தி மு க) முதலில் ஒரு ஒழுங்குப் பிரச்னை மூலம் எழுப்பினார்.

கோவை செழியன் கூறியதாவது:—

அமைச்சர் ப உ சண்முகத்தின் மீது முதலமைச்சர் நீதி விசாரணைக்கு உத்தரவிட்டுள்ளார். ஆனால் ப உ சண்முகம் அமைச்சர் பதவியிலிருந்து ராஜினமா செய்யவில்லை என்று தெரிகிறது.

கேரளத்தில் கோவிந்தன் நாயரும் தாமஸும் இப்படிப்பட்ட விசாரணைக்கு ஆளான போது ராஜினமா செய்தார்கள்.

டி. டி. கே. மீது நீதிவிசாரணை நடந்தபோதும் அவர் ராஜிநாமா செய்தார். அதுபோல ப. உ. சண்முகமும் ஏன் ராஜிநாமா செய்யவில்லை. முதலமைச்சருக்கும் மற்ற அமைச்சர்களுக்கும் இதில் சம்பந்தம் இருப்பதாக ப. உ. சண்முகம் சொல்லியிருக்கிறார். ஆகவே, முதல் அமைச்சரும் சம்பந்தம்பட்ட மற்ற அமைச்சர்களும் ராஜினமா செய்வார்களா?

முதல்வர்: ப.உ, சண்முகம் முதல்வருக்கு சம்பந்தம் இருப்பதாக சொல்லவில்லை.

கோவை செழியன் குறிப்பிடும் கேரளத்தைப் போல் வேறு 3 அமைச்சர்கள் மீது விசாரணை நடந்தது. அவர்கள் ராஜிநாமா செய்யவில்லை.

### மரபு கெடவில்லையா?

டாக்டர் ஹாண்டே மதிப்பீட்டுக்குழுவில் சொல்லப்பட்டுள்ள குற்றச்சாட்டுகள் முழுவதையும் விசாரிக்கவேண்டும் என்று நாங்கள் சொன்னோம். ஆனால் அதன்படி செய்யப்படவில்லை. சபை நடக்கும் போது சபையில் நீதிபதியின் பெயரை அறிவிக்காமல் நேற்று மாலை நீதிபதியின் பெயர் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இதனால் மரபு கெடவில்லையா.

முதல்வர்:— அறிவிப்புகளை அவையில் தருவது வழக்கம். அதையொட்டி அரசு ஆணை பிறப்பித்தது. அதை அவையில் சொல்லவேண்டிய அவசியம் இல்லை.

ஜேம்ஸ் (ப. காங்கிரஸ்):— சட்ட சபையில் இதுபற்றி விவாதம் நடந்தது. ஆகவே இது பற்றி சட்டமன்றத்தில் தீர்மானம் கொண்டுவந்து இருக்கவேண்டாமா?

சபாநாயகர்: எந்த விதியில் அப்படி இருக்கிறது?

ஜேம்ஸ்: (பழையகாங்கிரஸ்) சட்டசபையில் இதுபற்றி விவாதம் நடந்ததால் அதற்கான விதிமுறைகளையும், முடிவுகளையும் இங்கே கொண்டு வந்து இருக்கவேண்டும்,

### மாதவன் விளக்கம்

அமைச்சர் மாதவன்:— இங்கே நேற்று பேசப்பட்ட குற்றச்சாட்டின் அடிப்படையில் அரசாங்கம் ஆணை பிறப்பித்தது. முதன் முதலாக நேற்றுதான் ஆலடி அருணா திட்டவட்டமான குற்றச்சாட்டை சொல்லி அதற்கு தான் பொறுப்பு ஏற்பதாகவும் சொன்னார். அதையொட்டி அரசாங்கம் ஆணைப் பிறப்பித்தது.

### பொன்னப்ப நாடார்

பொன்னப்ப நாடார் (ப. காங்கிரஸ்): கேரளத்தில் உள்ள விசாரணை சட்டம் வேறுமாதிரியானது. ஆனால் இங்கே இந்த விசாரணை நேர்மையாக நடக்க ராஜிநாமா செய்வதுதான் நல்லது. அரசாங்கம் இதை மறுபரிசிலனை செய்ய வேண்டும்.

அமைச்சர் மாதவன்: இந்த அமைச்சர்மீது குற்றச்சாட்டு சொன்னவுடனேயே ராஜிநாமா செய்யவேண்டும் என்றால் எல்லா அமைச்சர்களையுமே போகச்சொல்ல முடியும். பிரதமர் உட்பட எந்த அமைச்சர்களும் இருக்கமுடியாது.

ஆகவே இந்த கோரிக்கையை ஏற்க முடியாது. குற்றச்சாட்டுக்கு ஆதாரம் இருக்கவேண்டும். அப்படி ஆதாரம் இருந்தால் அதற்கு அரசாங்கம் தயாராக இருக்கிறது.

சுரேந்திரன் (புது காங்கிரஸ்): வெங்கடாத்ரிகமிஷன் முன்னால் விடப்படும் என்ற ஒரு எண்ணம் நேற்று உருவாக்கப்பட்டது ஆனால் உயர் நீதி மன்ற நீதிபதியை நியமித்தது சரியா?

முதல்வர்: சுப்ரீம்கோர்ட் நீதிபதியை நியமிக்க வேண்டும் என்று ஆலடி அருணா கேட்டார். சுப்ரீம்கோர்ட் போவதற்கும் இதன் மூலம் வழியிருக்கிறது என்று நான் சொன்னேன். சுரேந்திரனுக்கு தைரியம் இருந்தால் வெங்கடாத்ரி கமிஷனிடம் சொல்லலாம்.

எட்மண்ட் (அ தி மு க) ஆதாரம் இருந்தால் ராஜினமா செய்கிறோம் என்று சொல்வது சரியில்லை, மதிப்பீட்டுக்குழு அறிக்கையிலேயே குற்றச்சாட்டுகள் சொல்லப்பட்டு இருக்கிறது. ப. உ. சண்முகம் மீது குற்றச்சாட்டு இருக்கிறது என்பது அதிலேயே முதல் நோக்கில் தெரியும். ஆகவே அவர் ராஜிநாமா செய்யவேண்டும்.

### எம்.ஜி.ஆர். நீதி விசாரணை செய்தாரா?

முதலமைச்சர்:— இந்த அமைச்சரவை கலைக்கப்பட்டு புதிய அமைச்சரவை வருகிறது என்று கற்பனையில் வைத்துக்கொள்வோம். எம். ஜி. ஆர். ஆளுங் கட்சியாகவும் நாங்கள் எதிர்க்கட்சியாகவும் இருக்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். இது கற்பனை தான்.

எம். ஜி. ஆர். மீது அந்நிய செலாவணி, வருமானவரி குற்றச்சாட்டுபோன்ற ஆயிரம் குற்றச்சாட்டுகளை நாங்கள் வைக்கிறோம். நீதி விசாரணை வைத்து உடனேயே ராஜிநாமா செய்துவிடுங்கள் என்று கேட்டால், குற்றச்சாட்டுக்கு முதல் நோக்கில் ஆதாரம் இருக்கிறதா என்றுதான் அவர் கேட்பார். அப்படி ராஜினமா செய்ய வேண்டுமென்றால் நான் உட்பட 16 அமைச்சர்களையும் ராஜிநாமா செய்ய வைக்க முடியும். இந்த அமைச்சரவையே இராது. இது ஜனநாயகத்திற்கு உகந்தது அல்ல.

எட்மண்ட் (அ. தி. மு. க): குற்றச்சாட்டை சொன்னவுடனேயே ராஜிநாமா செய்ய வேண்டுமென்று நாங்கள் சொல்லவில்லை. எம். ஜி. ஆர். பல குற்றச்சாட்டுகளை சொல்லி யிருக்கிறார்.

இதை ஆட்சேபித்து தி.மு. க.வினர் பலர் எழுந்து எம். ஜி. ஆர். இங்கே வந்து சொல்லட்டும்" என்றார்கள்.

எட்மண்ட் (அ. தி. மு. க) 72 டிசம்பர் 3-ந் தேதி $1\frac{1}{2}$ மணி நேரம் எம. ஜி. ஆர் குற்றச்சாட்டைச் சொல்லி இருக்கிறார். முதல் அமைச்சரே நீதி விசாரணைக்கு உத்தரவிட்டு இருப்பதால் குற்றச்சாட்டில் ஆதாரம் இருக்கிறது என்பதுதான்பொருள்.

முதலமைச்சர்: இதை பற்று முடிவு செய்ய வேண்டியவர் நீதிபதிதான் அந்த நீதிபதி இந்தகுற்றச்சாட்டுகளில் முதல் நோக்கிலேயே ஆதாரம் இருக்கிறது என்று சொன்னால் அமைச்சர் ப. உ. சண்முகம் ராஜினமா செய்துவிடுவார். நான்கூட அவருக்குச் சொல்ல

4-ம் பக்கம் பார்க்க

# 19-ந் தேதிவரை சட்டசபை கூட்டம்

சென்னை, ஏப், 9—சட்டசபை கூட்டம் இம்மாதம் 19 வரை நடக்கும் என்று சபாநாயகர் புலவர் கோவிந்தன் இன்று சட்டசபையில் அறிவித்தார்.

## நவீன இறைச்சிக் கூடம்

சென்னை. ஏப். 9—தமிழ் நாட்டில் 2 கோடி ரூபாய் முதலீட்டில், நவீன இறைச்சி கூடம் ஒன்றை அமைக்கும் திட்டத்தை தமிழக அரசு பரிசிலித்து வருகிறது என்று அமைச்சர் ஓ. பி. ராமன் இன்று சட்டசபையில் ஒரு கேள்விக்கு பதில் அளிக்கும் போது கூறினார்.

மத்திய அரசு, மாநில அரசு, இறைச்சிக் கார்ப்பரேஷன் ஆகிய மூன்றும்சேர்ந்து இதை நடத்த திட்டமிடப்பட்டுள்ளது என்றும் அவர் தெரிவித்தார்.

தமிழ் நாட்டில்

# ஜப்பானியப் பாணியில் முத்து வளர்ப்பு: சட்டசபையில் தகவல்

**சென்னை, ஏப். 9—தமிழ் நாட்டின் கடலோரப் பகுதிகளில் ஜப்பானிய பாணியில் முத்து வளர்ப்பு திட்டத்தை மேற்கொள்ள தமிழக அரசு உத்தேசித்துள்ளது.**

இதற்கென இப்போது இவ்வழியிலான சோதனைகள் மேற்கொள்ளப்படும்.

இத் தகவலை சட்டசபையில் அமைச்சர் சி. வி. எம். அண்ணாமலை தெரிவித்தார்.

சட்டசபை மீன் துறை, சமூக நலத்துறை மானியக் கோரிக்கைகளைத் தாக்கல் செய்து பேசுகையில் அவர் இவ்வாறு தெரிவித்தார்,

அமைச்சர் சி. வி. எம். அண்ணாமலை கூறியதாவது:-

மீன்பிடிப்பதத்காக உள்ள பயிற்சி நிலையங்களில் இது வரை 4,375 மீனவர்களுக்கு நவீன முறையில் மீன் பிடிப்பதற்கான பயிற்சியளிக்கப் பட்டுள்ளது.

### முத்து வளர்ப்பு

தற்போது பல்வேறு இயற்கை காரணங்களால் முத்துசிப்பி உற்பத்தி இல்லாமல் இருந்து வருகிறது. மத்திய கடல்மீன்வள ஆராய்ச்சி நிலையத்தின் ஒத்துழைப்புடன் முத்து வளர்ப்புத் திட்டத்தை செயல்படுத்தமுடிவு செய்யப் பட்டுள்ளது.

ஜப்பானில் கையாளப்படும் செயற்கை முத்து வளர்ப்பு முறைகள் இங்கும் சோதனையாக மேற்கொள்ளப் படும்.

இந்த சோதனை வெற்றி பெற்றால், தமிழ் நாட்டின் கடலோரத்தில் சில தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகளில் முத்து வளர்ப்பு திட்டத்தை வெற்றிகரமாக நடத்த முடியும்.

### மீன்பிடி துறைமுகம்

சென்னையில் ரூபாய் 6 கோடி 68 லட்சம் செலவில் ஒரு பெரிய மீன் பிடித்துறைமுகம் அமைக்கப்பட்டுவருகிறது.

தஞ்சையில் உள்ள மல்லிபட்டணம் கிராமத்தில் இறங்குதுறை வசதி அமைப்புக்காக ரூ. 10 லட்சத்து 60 ஆயிரம் செலவில் ஒரு துறைமுகம் அமைக்கப் படும். இந்தவேலை 1975—76ல் மேற்கொள்ளப்படும்.

தென் மண்டல கடல்பகுதிகளில் புதிய மீன் வளப்பகுதிகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. மன்னார் வளைகுடாவில் கெளுத்தி மீனும், தென் மேற்கு கடற்கரைப் பகுதியில் பொருவா மீனும் ஏராளமாக இருப்பது கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது.

ரூபாய் 5 கோடி அங்கீகரிக்கப்பட்ட மூலதனத்துடன் துவங்கப்பட்டுள்ள தமிழ்நாடு மீன்வள அபிவிருத்தி கழகம் மீன் பிடிப்பு துறையை மேம்படுத்துவதற்காக பல திட்டங்களை மேற்கொண்டுள்ளது.

### மீன் உற்பத்தி

தமிழ்நாட்டின் கடற்கரை பகுதியில் உள்ள அடிமட்ட மீன்வள உற்பத்தியை 2 மடங்காகவும் மேல்மட்ட மீன்வள உற்பத்தியை நான்கு மடங்காகவும் அதிகரிக்க முடியும் என்று கண்டறியப்பட்டுள்ளது. இதற்கான முயற்சிகளில் அரசு தீவிரமாக ஈடுபட்டுள்ளது."

இவ்வாறு அமைச்சர் அண்ணாமலை கூறினார்.

### விவாதம்

பின்னர் மானியக்கோரிக்கை மீது விவாதம் நடந்தது.

டென்னிஸ்:— (பழைய காங்கிரஸ்) மீன் பிடிப்பவர்களுக்கு எல்லா காலங்களிலும் தொழில் கிடைப்பது இல்லை, இதனால் அவர்கள் மிகவும் வறுமையில் வாடுகிறார்கள். மாற்று தொழில் ஏற்பாடு செய்து தரவேண்டும். மீனவர்களுக்கு சொந்தமாக படகுகள் தரவேண்டும். அவர்கள் வேலைக்குப்போனால் ஜல ஆபத்துக்களை எதிர்நோக்க வேண்டியிருக்கிறது. இவர்களுக்கு இன்சூரன்ஸ் திட்டத்தை செயல்படுத்த வேண்டும்.

விசைப்படகுகளை ரிப்பேர் செய்வதற்காக 25 மைல்களுக்கு ஒவ்வொரு ரிப்பேர் நிலையத்தை ஏற்படுத்தவேண்டும்.

கைரிக்ஷாவை ஒழித்த மாதிரியில் கையால் இழுக்கப்படும் வண்டிகளையும் ஒழிக்க நடவடிக்கை எடுக்கவேண்டும்.

ஹால்டா பவுலர் (நியமன உறுப்பினர்): முதியோர் கல்வி திட்டத்தின் கீழ் பெண்களுக்கு குடும்ப நலம், குழந்தைகள் வளர்ப்பு பயிற்சிகளை அளிக்கவேண்டும் என்றார்.

### மீனவருக்கு படகு சொந்தம்

குழ. செல்லையா (அ. தி. மு. க): உழவர்களுக்கே நிலம் சொந்தம் என்று சட்டம் செய்திருப்பதுபோல், பல ஆண்டுகளாக படகுகளில் வேலை செய்த மீனவர்களுக்கு அந்த படகைச் சொந்தமாக்க வேண்டும். நாட்டு படகு காரர்களுக்கும், விசை படகு காரர்களுக்கும் அடிக்கடி மோதல் ஏற்படுகிறது. இதை தடுக்க விசைப் படகுகள் காலையில்தான் மீன் பிடிக்கச் செல்லவேண்டுமென்று சட்டம் செய்யவேண்டும்.

7-ம் பத்தி தொடர்ச்சி

இரால் மீன்களுக்கு நல்ல லாபம் கிடைக்கிறது. ஆனால் இது மீனவர்களுக்கு கிடைப்பதில்லை. மீனவர்களிடம் இருந்து குறைந்த விலையில் இராலை வாங்கி வியாபாரிகள் வெளிநாட்டிற்குஅனுப்பி நிறைய லாபங்கள் சம்பாதிக்கிறார்கள். இவைகளை அரசாங்கமே வாங்கி ஏற்றுமதி செய்தால் மீனவர்கள் பயனடைவார்கள் என்று குழ. செல்லையா பேசினார்.

### மானிய உதவி

வேதாசலம் (தி மு க): மீனவர்களை தாழ்த்தபட்ட வகுப்பில் சேர்க்க வேண்டும். அல்லது மிக பின்தங்கிய வகுப்பிலாவது சேர்க்கவேண்டும். மீனவர்களுக்கு தாராளமாக மானிய உதவி தரவேண்டும்.

கே என் குமாரசாமி: (புது காங்கிரஸ்) மீனவர்களின் படகுகளில் இயந்திரம் பொருத்தவேண்டும்.

5-ம் பத்தி பார்க்க

# சட்டசபையில் மகாராஜாவா? உறுப்பினர் தமாஷ்

**சென்னை, ஏப் 9—தி, மு. க. உறுப்பினர் பெரியசாமி இன்று சட்டசபையில் தலையில் துண்டைக் கட்டிக் கொண்டு அமர்ந்தார்.**

அப்போது இதைக் கவனித்த மற்றொரு தி. மு. க. உறுப்பினர் காமாட்சி "சபையில் ஒரு மகாராஜா வந்திருக்கிறாரா? என்று நினைத்தேன்" என ஒரு ஒழுங்கு பிரச்னையை எழுப்பினார். உடனே பெரியசாமி தலைப்பாகையை அவிழ்த்தார். துணை சபாநாயகர், "கணபதி தலைப்பாகை கட்டுவது தவறு இல்லை, என்றுசொல்லி பெரியசாமி தலைப்பாகையை எடுத்துவிட்டதாகக் கூறினார்.

# தஞ்சாவூர் விக்கிரக திருட்டு: ஒருவர் கைது

சென்னை, ஏப். 9—தஞ்சாவூர் விக்கிரகத் திருட்டுகளில் சம்பந்தப்பட்டவர் என்று கூறப்படும், தாமஸ் நாடார் தஞ்சாவூரில் சி. ஐ. டி. போலீசாரால் கைது செய்யப்பட்டார். புலன் விசாரணை நடக்கிறது.

# செம்புக் கனியிலிருந்து தங்கம்

கல்கத்தா, ஏப். 9—இந்தியாவில் முதன முறையாக செம்புக்கனியிலிருந்துவெள்ளியும், தங்கமும் பிரித்து எடுக்கப்படும்.

பீகாரில் காடிஸ்லா என்னுமிடத்தில் இந்துஸ்தான் செம்பு நிறுவனத்துக்குச் சொந்தமான ஆலையில் இவ்விதம் தங்கமும் வெள்ளியும் பிரித்தெடுக்கப்படும்.

ரூ 15லட்சசெலவில் அமைக்கப்பட்டுள்ள இந்த ஆலை அடுத்த மாதம் செயல்படத் துவங்கும்.

இத்தகவலை இந்துஸ்தான் செம்பு நிறுவனத்தின் தலைவரான டி.கே. தாவோன் தெரிவித்தார்.

ஒரு டன் செம்புக் கனியில் 30 கிராம்தங்கமும், இரண்டு முதல் 3 கிராம் தங்கமும் இருப்பதாக அவர் கூறினார்.

காடிஸ்லா ஆலையில் ஓராண்டில் செம்புக் கனியிலிருந்து சுமார் 80 கிலோ தங்கமும் 800 கிலோ வெள்ளியும் பிரித்தெடுக்கப்படும் என்றும் அவர் கூறினார்.

இவ்விதம் அரிய உலோகங்களைப் பிரித்தெடுப்பதற்கான தொழில் நுட்பம் முற்றிலும் இந்தியாவிலேயே உருவாககப்பட்டதாகும் என்றார் அவர்.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

சென்னை வானொலி நிலையம்: குன்னக்குடி வைத்தியநாதனின் மெல்லிசை, தலைமை: முதலமைச்சர் கருணாநிதி. இடம்: கலைவாணர் அரங்கம். மாலை 6-30 மணி.

சிந்தாமணி அம்மாள் இலவசத் தொடக்கப்பள்ளி 10-ம் ஆண்டு விழா: தலைமை: ஜே. ஐ. கோயில் பிள்ளை. ஆசிரியைகளுக்கு சீருடை வழங்குபவர் காமராஜ். கலந்துகொள்வோர்: எம். ஏ. பொன்னுசாமி ரெட்டியார், ஐ. எம். மல்கானி. இடம்: வாணி மகால். மாலை 6 மணி.

மயிலாப்பூர் ஆகாடமி 22வது ஆண்டு விழா. தலைமை: அமைச்சர் நெடுஞ்செழியன். இடம்: சிருங்கேரி ஜகத்குரு பிரவச்சன மந்திரம், ராஜா அண்ணாமலைபுரம். மாலை 6-30 மணி.

மாக்ஸ் முல்லர்பவன்: கண்காட்சி: 10-ந் தேதி முதல் 19ந் தேதிவரை நடைபெறும். இடம் மாக்ஸ்முல்லர் பவன் சென்னை.

## ரெயில் பெட்டி ஓரமாக மரம் விழுந்து 4 பேர் மரணம்

கௌஹாத்தி, ஏப். 9— ரெயில் பாதை ஓரமாக இருந்த ஒரு மரம் விழுந்ததன் விளைவாக ரெயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த பிரயாணிகளில் 4 பேர் மாண்டனர். 24 பேர் காயமடைந்தனர். அவர்களில் சிலருக்கு பலத்த காயம் ஏற்பட்டது. இந்த விபத்து கௌஹாத்தி லும்டிங்பிரிவில் ஹவிப்பூர், லம்ஸகாங் ஸ்டேஷன்களுக்கிடையே ஏற்பட்டது.

பலத்த காற்று வீசியதை அடுத்து அந்த மரம் விழுந்தது. அப்போது ஓடிக்கொண்டிருந்த ஒரு ரெயிலின் சில பெட்டிகளை உரசிக்கொண்டு மரம் விழுந்ததால் 4 பேர் மரத்தில் அடிபட்டு மாண்டனர். 24 பேர் காயமடைந்தனர்.

இதனால் நேரடி ரெயில் போக்குவரத்து பாதிக்கப்படவில்லை. காயமடைந்தவர்கள் லும்டிங் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

வடக்கு எல்லைப்புற ரெயில்வே ஜெனரல் மானேஜரும் உயர் அதிகாரிகளும் ஸ்தலத்துக்கு விரைந்துள்ளனர்.

## கோவிலில் அதிகாரிகள் திடீர் சோதனை நடத்தி நெல் கைப்பற்றிய சம்பவம்

# கலெக்டரிடம் விசாரிக்ககட்டளை மாதவன் தகவல்

சென்னை, ஏப். 9—கும்பகோணம் அருகே உள்ள ஒரு கோவிலில் அதிகாரிகள் திடீர் சோதனை நடத்தி நெல் கைப்பற்றியதாகக் கூறப்படும் சம்பவம் சம்பந்தமாக மாவட்ட கலெக்டருடன் தொடர்பு கொண்டுவிசாரிக்கும்படி சொல்லியிருப்பதாக இன்று சட்டசபையில் அமைச்சர் மாதவன் கூறினார்.

நாச்சியார் கோயில் சீனிவாச பெருமாள் கோயிலிலிருந்து நெல் கைப்பற்றப்பட்டதாக கூறப்படும் செய்தி உண்மையானதாக இருந்தால் அது குறித்துத் தாம் வருத்தப்படுவதாக உணவு. கூட்டுறவு துறை அமைசர் மாதவன் இன்று சட்டசபையில் கேள்வி நேரத்தின் போது தெரிவித்தார்.

நெல் கொள்முதல் பற்றி பல உறுப்பினர்கள் கேட்ட துணைக் கேள்விகளுக்கு அமைச்சர் பதிலளிக்கையில் தெரிவித்ததாவது:

சிறிய விவசாயிகளுக்கு பாதகமாக நெல் கொள்முதல் செய்யப்படுகிறது என்பது சரியல்ல. பெரிய விவசாயிகளிடம் நெல் கொள்முதல் சரியாகச் செய்வதில்லை என்று கூறுவதும் சரியல்ல.

பல பெரிய விவசாயிகள் தங்களிடம் அதிகமாக நெல் கொள்முதல் செய்யப்படுவதாகக் கூறி நீதி மன்றத்துக்குச் சென்றிருக்கிறார்கள். சில பெரியவிவசயிகள் தங்கள் வீட்டிற்குநெல்எடுக்கவரக்கூடாது என்று தடை உத்தரவை வாங்கியிருக்கிறார்கள்.

சீனிவாச பெருமாள் கோயிலில் இருந்து அதிகாரிகள் நெல்லைக் கைப்பற்றினார்கள் என்ற செய்தி உண்மையானதாக இருந்தால் அதற்காக வருத்தப்படுகிறேன். அதிகாரிகள் அப்படிநெல் எடுக்கவேண்டியிருந்தால் கூட கோயில் அதிகாரிகள் மூலம் செய்திருக்கலாம். இன்று காலை இது சம்பந்தமாக கலெக்டரிடம் தொடர்பு கொண்டு விசாரிக்கச் சொல்லியிருக்கிறேன். இந்த ஆண்டு வறட்சி காரணமாக நெல் உற்பத்திக்குறைந்திருக்கிறது என்பது உண்மைதான். ஆனாலும் உபரி நெல்லைத் தாராளமாக அரசாங்கத்துக்கு தந்து ஒத்துழைக்க வேண்டும்.

1962ல் 42 ரூபாயாக இருந்த நெல்லுக்கு இந்த ஆண்டு 89 ரூபாய் தருகிறோம். அவர்களின் உபரி நெல்லை ரூபாய் 100க்கு வாங்குகிறோம். இதற்கு மேலாக இன்றைய வெளி மார்க்கெட் விலைக்கு அரசு நெல் வாங்கினால் மக்கள் பாதிக்கப்படுவார்கள்.

இவ்வாறு அமைச்சர் மாதவன் கூறினார்.

## கோவிலில் நடந்த திடீர் சோதனை

சென்னை, ஏப். 9— கும்பகோணத்துக்கருகே நாச்சியார் கிராமத்தில் உள்ள சீனிவாச பெருமாள் கோவிலின் நெற்களஞ்சியங்களில் நேற்று தமிழ்நாடு உணவு வழங்குத் துறை அதிகாரிகள் திடீர் சோதனை நடத்தினார்கள்.

அன்றாட பூஜைகளுக்கும் திருவிழாக்களுக்கும் சேமித்து வைக்கப்பட்டிருந்த 540கலம் நெல்லை உணவுத் துறை அதிகாரிகள் கைப்பற்றி எடுத்துச் சென்றனர்.

90 கலம் பிடிக்கக்கூடிய மற்றொரு நெற் களஞ்சியம் அதிகாரிகளால் சீல் செய்யப்பட்டது.

கோவில் நிர்வாக அதிகாரி, தர்மகர்த்தா ஆகியோரின் பொறுப்பில் உள்ள இந்த நெற் களஞ்சியங்களை அவர்கள் அந்த ஊரில் இல்லாதபோது அதிகாரிகள் சோதனை இட்டு எடுத்துச் சென்றனர்.

கோவிலில் உள்ள நெல் இருப்பு கோவில் தேவைகளுக்கும் கோவில் ஆதரவில் நடைபெறும் அனாதைஆசிரமத்தின் தேவைகளுக்கும் குறைந்த பட்ச தேவைக்கே போதுமானவை என்பதை துணை ஆணையருக்கு தெரிவிக்க கோவில் நிர்வாக அதிகாரி தஞ்சாவூருக்கு சென்றிருந்ததாக கூறப்படுகிறது.

### அனாதைகள் நிலை

கோவிலின் சேமிப்பு அறையும் நெற்களஞ்சியமும் உணவு வழங்குத் துறை அதிகாரிகளால் பூட்டி சீல் செய்யப்பட்டு விட்டதால் உள்ளூர் கிராம வாசிகள் உதவியால் நேற்றைய கோவில் பூஜை நடந்தது. கோவிலின் ஆதரவில் நடக்கும் அனாதை ஆசிரமத்தில் உள்ள 33 பேர்களுக்கும் அடுத்த வேளை உணவு எப்படி கிடைக்கும் என்று தெரியவில்லை.

கோவிலுக்குச்சொந்தமான 335ஏக்கர் நன்செய் நிலத்தை பயிரிடும் குத்தகைக்காரர்களில் பலர் கோயிலுக்கு தர வேண்டிய குத்தகை நெல்லை சரியாக அளிக்கவில்லை என்று கூறப்படுகிறது. அரசாங்கத்திற்கு அளக்கவேண்டிய லெவி நெல் 1250 மூட்டைகள் என்றும் ஆனால் கோவில் நிர்வாகத்தினரால் அரசாங்கத்தின் கட்டாய கொள் முதலுக்கு 497 மூட்டைகளே கொடுக்க முடிந்ததாகவும் கூறப்படுகிறது.

எனவே அடுத்தகுறுவை அறுவடைவரை கோவில் தேவைகளுக்கு சேமித்து வைக்கப்பட்டிருந்த நெல் அதிகாரிகளால் கைப்பற்றப்பட்டது என்று தெரிகிறது.

அதிகாரிகளின் சோதனைக்குப் பிறகு கோவிலின் பரந்த பகுதி முழுவதும் நெற்கள் இறைந்து கிடந்த காட்சி பரிதாபமாக இருந்தது.

இந்து அறநிலைய துறை துணை ஆணையர் டி. வி. வேணுகோபால் கோவிலுக்குச் சென்று பார்வையிட்டார். உதவி ஆணையர் சூர்யராஜ் நடந்த சம்பவங்களைப் பற்றிய அறிக்கையொன்றை ஆணையருக்கும் சம்பந்தப்பட்ட அமைச்சருக்கும் அனுப்பி இருப்பதாகத் தெரிகிறது.

## பாட நூல் நிறுவன நிர்வாகி வருத்தம்

# "புத்தகத்திற்கு 10 ரூபாய் செலவு செய்ய தயங்குவதா"?

சென்னை, ஏப். 9— சோவியத் ரஷியாவில் உள்ள பிரபல புத்தக ஏற்றுமதி நிறுவனமான மெழ்துன ரோநாயாநிகா என்ற நிறுவனத்தின் துணைத் தலைவர் ஏ. பெலோஸ்டோஸ்கியும் வேறு சில அதிகாரிகளும் சென்னை வந்திருக்கின்றனர்.

அவர்களுக்கு சென்னை நியூ செஞ்சுரி புத்தகநிலைய டைரக்டர்கள் சார்பில் வரவேற்பு உபசாரவிருந்து ஒன்று நேற்று முன்தினம் மாலை நடத்தப்பட்டது.

நிகழ்ச்சிக்கு சென்னை பல்கலைக் கழக துணை வேந்தர் என். டி. சுந்தரவடிவேலு தலைமை வகித்தார்.

சென்னையில் உள்ள ரஷ்யத் துணைத் தூதுவர், கிழக்கு ஜெர்மன் துணைத் தூதுவர், தமிழ்நாடு பாட நூல் நிறுவன நிர்வாக இயக்குநர் எஸ். என். சொக்கலிங்கம், தொழிற்சங்கத் தலைவர் ஏ. எஸ். கே. அய்யங்கார், மற்றும் எழுத்தாளர்கள், வெளியீட்டாளர்கள் நிகழ்ச்சியில் கலந்துகொண்டனர்.

சுந்தரவடிவேலு தமது தலைமை உரையில்சினிமாவும் டெலிவிஷனிலும் மக்களிடம் பெருமளவு ஆதிக்கம் புரிந்தாலும், அவைகளால் புத்தகங்களின் இடத்தை நிரப்பமுடியாது என்று குறிப்பிட்டார்.

ஏ. எஸ். கே. அய்யங்கார் பேசுகையில் இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு அன்று முதல் இன்றுவரை உண்மையான நண்பனாக இருந்து வருவது சோவியத் ரஷியா ஒன்றுதான் என்று கூறினார்.

எஸ். எஸ். சொக்கலிங்கம் பேசுகையில் ரஷியாவில் கடந்த ஆண்டு 160 கோடி புத்தகமும், ஜப்பானில் 63 கோடி புத்தகமும் வெளியிடப்பட்டதாக தெரிவித்தார்.

ஆனால் உலகிலேயே ஜனத்தொகையில் இரண்டாவது நாடான இந்தியாவில் கடந்த ஆண்டு 3 கோடி புத்தகம்தான் வெளியிடப்பட்டிருப்பதாகக் கூறினார்.

நம்நாட்டு மக்களிடம் புத்தகம் வாங்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்படாததே இதற்குக் காரணம் என்றார் அவர்.

பட்டுப்புடவைகள் வாங்க ஆயிரமும், ஆயிரத்து ஐந்நூறும் தயங்காமல் செலவு செய்யும்நாம், ஒரு புத்தகத்தை வாங்க 10 ரூபாயை செலவழிப்பதில்லை என்றார்.

லட்சக்கணக்கில் அச்சாகும் புத்தகங்கள் கூட ரஷ்யாவில் ஒரு சில நாட்களில் விற்பனையாகிவிடுவதாகவும், ஆனால் இந்தியாவின் 1000 புத்தகம் போட்டாலே அது விற்பனையாக பல ஆண்டுகள் தேவைப்படுகின்றன என்று சொக்கலிங்கம் பேசினார்.

தமக்கு அளிக்கப்பட்ட வரவேற்புக்கு பெலோஸ்டாஸ்கி நன்றி தெரிவித்தார்.

இந்தியப் பல்கலைக் கழகங்களில் ரஷ்ய நாட்டின் பாடப் புத்தகங்கள் பயன்படுத்தப் பட்டுவருவதாகவும், இந்தியாவுக்கு தேவையான புத்தகங்களை இந்திய மொழிகளிலேயே ரஷ்யாவில் அச்சிடப்படுவதாகவும் அவர் தெரிவித்தார்.

விழா ஆரம்பத்தில் எம். வி. சுந்தரம் அனைவரையும் வரவேற்றார்.

இறுதியில் பாலகிருஷ்ணன் நன்றி கூறினார்.

## மொரார்ஜிக்கு ஆதரவாக

# குஜராத்தில் கிளர்ச்சி: கலெக்டர் ஆபீஸ்களில் 11ம் தேதி 'கேரோ'

ஆமதாபாத், ஏப். 9— மொரார்ஜி தேசாயின் உண்ணாவிரதத்துக்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் வருகிற 11ம் தேதி குஜராத்தில் மாவட்ட கலெக்டர் அலுவலகங்களை "கேரோ" செய்கின்றனர்.

குஜராத்தில் அரசு நிர்வாகத்தை நிலைகுலைய செய்ய குஜராத் லோக சங்கர்ஷ் சமிதி முடிவுசெய்திருக்கிறது. சமிதியின் அவசரக் கூட்டம் ஆமதாபாத்தில் நடைபெற்றது. அப்போது மொரார்ஜிக்கு ஆதரவாக கிளர்ச்சி நடத்துவதென்று தீர்மானிக்கப்பட்டது.

முதல் கட்டமாக வருகிற 11-ம் தேதி வெள்ளியன்று குஜராத்தின் எல்லா மாவட்ட தலைநகரங்களிலும் கலெக்டர் அலுவலகங்களை கேரோ செய்யமுடிவெடுக்கப்பட்டது. ஆமதாபாத்தில் 12-ம் தேதி 'பந்த்' (கடை, அடைப்பு) நடத்தவும் தீர்மானித்துள்ளதாகத் தெரிகிறது. இந்தக் கூட்டத்தில குஜராத் பழைய காங்கிரஸ் கமிட்டி தலைவர் பாபுபாய் படேல், ஜனசங்கத் செயலாளர் வசந்த்.கஜேந்திர கட்கர், உமாசங்கர் ஜோஷி எம். பி., பாரதிய லோக தளத் தலைவர் அமீன் முதலியோர் கலந்து கொண்டனர்.

மொரார்ஜி உண்ணாவிரதம் முடியும் வரை பல்கலைக் கழகத் தேர்வுகளைத் தள்ளி வைக்குமாறு மாணவர்கள் கோரியுள்ளனர்.

பருவமழைக்கு முன்பாக தேர்தலை நடத்துமாறு ரூ. 1 லட்சம் கையெழுத்து திரட்டுவதற்கு பழைய காங்கிரஸ் ஒரு இயக்கத்தை துவக்கியுள்ளது.

மொரார்ஜிக்கு ஆதரவாக பர்தோலி நகரில் பட்டேலில் தோழரும் 80 வயது முதியவருமான கோபால் காகாவும், பம்பாய், டெல்லி, பாட்னா, பெங்களூர் மற்றும் பல்வேறு இடங்களில் பல நூற்றுக் கணக்கானவர்கள் உண்ணாவிரதம் இருக்கின்றனர்.

இது நொண்டிச்சாக்கு.

"குஜராத்திலே வறட்சியின் கொடுமையினால், ஆடு மாடுகள் பரிதாபமாகச் செத்துக் கொண்டிருக்கின்றன. இது போல அங்கே மனிதர்களும் சாக நேர்வதை நான் விரும்பவில்லை.

யார் மீதும் எனக்குக் கோபம் இல்லை.

யாரைப் பற்றியும் கெட்ட அபிப்பிராயமும் எனக்குக் கிடையாது. நான் எனது பணியையே செய்கிறேன். இப்போது குஜராத்தில் தேர்தல் நடைபெறச் செய்வதற்கு வேறு வழி எனக்குத்தோன்றாததினால்தான், நான் உண்ணாவிரதம் இருக்கிறேன்.

உங்களுக்கு சலிப்பு ஏற்பட்டதன் விளைவுதான் இந்த உண்ணாவிரதமா? என்று நிருபர்கள் கேட்டதற்கு பதிலளிக்கையில்:

"எனக்கு எப்போதும் சலிப்பு ஏற்பட்டதில்லை. நான் எப்போதும் நம்பிக்கையுடன் தான் இருக்கிறேன். ஆனால், இவ்விஷயத்தில் என்னால் செய்யக்கூடிய கடைசி நடவடிக்கை இதுவே என்று நான் கருதுகிறேன்."

இவ்வாறு மொரார்ஜி பேட்டியளித்தார்.

### எடை குறைவு

மொரார்ஜி தேசாய்உண்ணாவிரதம் தொடங்கி, 2-வது நாளான நேற்று பிற்பகல் டாக்டர்கள் அவரை சோதனை செய்தபோது அவரது எடையில் 2 பவுண்டுகள் குறைந்து உள்ளதாகத் தெரிவித்தனர்.

## மொரார்ஜி பேட்டி

புதுடெல்லி, ஏப். 9— உண்ணாவிரதம் இருந்துவரும் மொரார்ஜிதேசாய் நிருபர்களுக்கு டெல்லியில் பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:—

"பருவ மழைக் காலத்திற்கு முன்பாக, குஜராத்தில் தேர்தல்களை நடத்தினால், அங்கு அரசின் கவனம் பூராவும் தேர்தல் பணிகளில் திருப்பி விடவேண்டி இருக்கும்; இதனால் அங்கு வறட்சி நிவாரணப் பணிகள் பாதிக்கப்படும் என்று அரசு கூறுகிறது.

## புதிய கப்பலுக்கு சத்தியமூர்த்தி பெயர்வைப்பு

சென்னை, ஏப். 9— 'ஷிப்பிங் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா' என்னும் இந்திய கப்பல் நிறுவனம ஜப்பானிலிருந்து புதிதாகவாங்கியுள்ள எண்ணெய் கப்பலுக்கு பிரபல சுதந்திரப போராட்டத்தலைவர் சத்தியமூர்த்தியின் பெயர் வைக்கப்பட்டுள்ளது.

இந்நாட்டுக்குசத்தியமூர்த்தி ஆற்றியுள்ள பெரும் தொண்டை கவுரவிக்கும் வகையில் அககப்பலுக்கு இப்பெயர் வைக்கப்பட்டுள்ளதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

மேற்படி நிறுவனம் இக் கப்பலை இப்போது டெலிவரி எடுத்துக்கொண்டுள்ளது. இக் கப்பல் வாங்கப்பட்டுள்ளதானது இக்கப்பல் கார்ப்பரேஷனின் வளர்ச்சியில் மற்றொரு மைல்கல்லாகும்.

இக்கப்பலையும் சேர்த்தால் இந்நிறுவனத்திடம் மொத்தம் 119 கப்பல்கள் உள்ளன. இந்நிறுவனம் மேலும் பல கப்பல்களை வாங்க ஆர்டர் கொடுத்துள்ளது.

தற்போது மொத்தம் 30 லட்சம் டன் எடைத் திறனைக் கொண்ட கப்பல்களைப் பெற்றுள்ள இந்நிறுவனம் உலகில் மிகப் பெரியதான தனிப்பட்ட கப்பல் கம்பெனி என்னும் இடத்தை வகிக்கிறது. 1961ல் துவக்கப்பட்ட இக் கப்பல் நிறுவனம் கடந்த 13 ஆண்டுகளுக்குள்ளாக இச் சிறப்பான நிலையை எட்டியுள்ளது.

## காமராஜர் டெல்லி போகிறார்

சென்னை, ஏப். 9—பழைய காங்கிரஸ் கட்சித் தலைவர் காமராஜர் நாளை 10ந் தேதியன்று மாலை சென்னை நகரை விட்டு விமான மூலம் டெல்லி போகிறார். 14ந் தேதி திங்கட் கிழமை இரவு விமான மூலம் சென்னை திரும்புவார்.

# கேரள சட்டசபை கலைப்பு கூடாது: பிரதமர் இந்திரா கருத்து

புதுடெல்லி, ஏப். 8—கேரளாவில் உடனடியாக சட்டசபையைக் கலைத்து ஜனாதிபதி ஆட்சியை அமுல் படுத்தவேண்டிய அவசியமில்லை என்று பிரதமர் இந்திரா காந்தி கருதுவதாகத் தெரியவந்துள்ளது.

கேரள உள்துறை மந்திரி கருணாகரன் டெல்லியில் பிரதமர் இந்திராவை சந்தித்துப் பேசியபோது அவரிடம் பிரதமர் இவ்விதம் கருத்து தெரிவித்ததாக நம்பப்படுகிறது.

புது காங்கிரஸ் கட்சித் தலைவர் பருவாவும் இவ்விதமே கருத்து கூறியதாகத் தெரிகிறது.

எனினும் இந்திராவும் பருவாவும் இந்த விஷயத்தில் ஒரு முடிவுகுவர கேரள புது காங்கிரஸ் தலைவர் ஏ. கே. அந்தோனியின் வருகையை எதிர்பார்த்து வருகின்றனர்.

சட்டசபையில் ஆளும் கட்சிக்கு கூட்டணி மெஜாரிடி இழந்துவிட்டதால் கேரள மந்திரிசபை உடனடியாக ராஜினாமா செய்து விரைவில் தேர்தலை எதிர்ப்படவேண்டும் என்று அந்தோனி கருத்துக் கொண்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

டெல்லியில் மந்திரி கருணாகரன் பிரதமர் இந்திராவையும், பருவாவையும் சந்தித்து சுமார் 1 மணி நேரம் கேரள அரசியல் நிலைமைப் பற்றி பேச்சுவார்த்தை நடத்தினார்.

பதவியில் இருக்கும்போதே தேர்தலை எதிர்ப்படுவதுதான் புதுகாங்கிரசுக்கு நல்லது என்று அவர் எடுத்துக் கூறியதாகத் தெரிகிறது.

### கலைப்புக்கு எதிர்ப்பு

இதற்கிடையே கேரளா காங்கிரஸ் (ஒரிஜினல்) கட்சியைச் சேர்ந்த ஜான் ஜாகப் நேற்று டெல்லியில் பிரதமர் இந்திராவை சந்தித்துப் பேசினார். சட்டசபையை கலைக்கக்கூடாது என்று அவர் இந்திராவிடம் கூறினார்.

சட்டசபையில் முதல்வர் அச்சுதமேனன் அரசு மீது நம்பிக்கை தெரிவிக்கும் தீர்மானம் கொண்டு வந்தால் அதை தனது கட்சி ஆதரிக்கும் என்று ஜாகப் உறுதி கூறினார்.

எனினும் முதல்வர் நம்பிக்கைத் தீர்மானம் கொண்டு வரவேண்டியதில்லை.

எதிர்க்கட்சியினரை நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவருமாறு விட்டுவிட வேண்டும். அவ்விதத் தீர்மானம் நிச்சயம் தோற்கும் என்று ஜாகப் சொன்னார்.

சட்டசபையில் கேரள காங்கிரஸ் (ஒரிஜினல்)கட்சி உறுப்பினர்கள் இருவர் உள்ளனர்.

கேரள சட்டசபையில் ஆளுங்கட்சி கூட்டணிக்கு 64 பேர் ஆதரவு உள்ளது. எதிர்கட்சியின் பலம் 65 ஆகும். கேரள காங்கிரஸ் (ஒரிஜினல்) கட்சி ஆதரவளித்தால் ஆளுங் கட்சி கூட்டணிக்கு ஒரு ஓட்டு மெஜாரிட்டி கிடைக்கும்.

கேரளா முதல்வர் அச்சுதமேனன் ஆளுங்கட்சிக் கூட்டணியின் பலத்தை சோதிக்க சட்ட சபையைக் கூட்டுவதை புது காங்கிரஸ் மேலிடம் எதிர்க்கவில்லை என்று விஷயமறிந்த வட்டாரங்கள் கூறுகின்றன. எனினும் அதே நேரத்தில் ஜனாதிபதி ஆட்சியை அமுல் படுத்துகின்ற நிலைமை ஏற்பட்டு விடுவதை புது காங்கிரஸ் மேலிடம் விரும்பவில்லை.

# அரிசி பேர ஊழல் புகார்: நீதிபதி நியமனம்

சென்னை, ஏப். 9—தஞ்சாவூர் கூட்டுறவு சங்க அரிசி பேரம் சம்பந்தமாகவும், தாண்டவராயனுக்கு பேச்சுவார்த்தைகள் மூலம் கொடுக்கப்பட்ட டெண்டர் சம்பந்தமாகவும் கூறப்படும் ஊழல் புகார்களை விசாரிக்க சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி டி. ராமபிரசாத் ராவ் நியமிக்கப்பட்டுள்ளார்.

3 மாதத்திற்குள் தமது அறிக்கையை அவர் அளிக்க வேண்டுமென்றும் தெரிவிக்கப்பட்டிருப்பதாக அரசாங்க அறிக்கை ஒன்று தெரிவிக்கிறது.

## ஜெ. பி- கார் மீது தாக்குதல்

# "திட்டமிட்ட செயல்" பழைய காங்கிரஸ் தலைவர் குற்றச்சாட்டு

புதுடெல்லி, ஏப். 9—"கல்கத்தாவில் ஜெயப்பிரகாஷின் கார் தாக்கப்பட்ட சம்பவமானது, முதல்வர் சித்தார்த்த சங்கர் ராயின் தலைமையிலான மாநில அரசின் திட்டமிட்ட செயலே. இதற்கு பிரதமரின் மறைமுக அங்கீகாரமும் இருந்திருக்கிறது" என்று மக்கள் சபையில் பழைய காங்கிரஸ் தலைவர் எஸ்.என். மிஸ்ரா குற்றம் சாட்டினார்.

எஸ். என். மிஸ்ரா கூறிய குற்றச்சாட்டை ஆளுங்கட்சியினர் மறுத்தனர்.

கல்கத்தாவில் சில தினங்களுக்கு முன்னர் ஜெயப்பிரகாஷ் நாராயணனின் காரை சூழ்ந்து கொண்டு வன்முறை தாக்குதல்கள் நடத்தப்பட்டதையும் சோஷலிஸ்டு உறுப்பினர் சமார்குகா தாக்கப்பட்டதையும் கண்டித்து மக்கள் சபையில் எஸ். என். மிஸ்ரா ஒரு தீர்மானம் கொண்டுவந்தார்.

இத் தீர்மானத்தின்மீது நடந்த விவாதத்தின்போது ஆளுங்கட்சி இறுப்பினர்களுக்கும், கம்யூனிஸ்டல்லாத எதிர்க்கட்சி உறுப்பினர்களுக்கும் இடையே வாக்குவாதம் நடந்தது.

இறுதியில் இத்தீர்மானம் தோல்வி அடைந்தது.

தீர்மானத்தைக் கொண்டு வந்து எஸ்.என்.மிஸ்ரா பேசினார். அத்தீர்மானத்துக்கு கம்யூனிஸ்டு உறுப்பினர் இந்திரஜித்குப்தா கொண்டு வந்த திருத்தத்தை ஏற்பதா என்பது பற்றி சுமார் 1 மணி நேரம் சர்ச்சை நடந்தது. பின்னர் அத்திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

தீர்மானத்தைக் கொண்டு வந்து எஸ். என். மிஸ்ரா பேசுகையில் மக்கள் மீது "பாசிச ஆட்சியை" திணிக்கவே ஆளுங்கட்சியினர் இவ்வித ஆர்பாட்டங்களை நடத்துவதாகக் குற்றஞ்சாட்டினார்.

பகத் (புது காங்) பேசுகையில் எதிர்கட்சியினர் சிறிய விஷயத்தை அரசியல் நோக்குடன் பெரிதாக ஆக்கப்பார்க்கின்றனர் என்றார்.

தினேன் முகர்ஜி (மார்க்சிஸ்ட்) தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார்.

மாயாரே, பிரியரஞ்சன் தாஸ் முன்ஷி சி.எம். ஸ்டீபன் என். கே. பி. சாலவே ஆகிய புது காங்கிரஸ் உறுப்பினர்களும், கம்யூனிஸ்டு உறுப்பினர் இந்திரஜித் குப்தாவும் தீர்மானத்தை எதிர்த்துப் பேசினர்.

சமார்குகா, (சோஷ) பேசுகையில் மேற்படி சம்பவத்தின்போது போலீசார் அரசின் உத்தரவின்பேரில்தான் கைகட்டி நிற்பதாகத் தோன்றியது என்றார்.

வி. மாயவன் (தி.மு.க):— தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார்.

### மந்திரி பேச்சு

தீர்மானத்தை எதிர்த்து உள்துறை மந்திரி பிரும்மானந்தரெட்டி பேசுகையில் கல்கத்தா சம்பவம் "சாதாரண ஆர்ப்பாட்டமே" என்றார்.

இத்தீர்மானம் அரசியல் நோக்குடன் கொண்டு வரப்பட்டிருப்பதாகவும் அவர் சொன்னார்.

ராணுவம் போலீஸ் இடையே எதிர்ப்பு உணர்ச்சியையும், விசுவாசமின்மையையும் ஏற்படுத்த முயற்சிக்கும் வகையில் ஜெயப்பிரகாஷ் பேசுவது தேசத்துரோக நடவடிக்கை இல்லையா" என்று பிரும்மானந்த ரெட்டி கேட்டார். "அப்படியானால் ஜெயபிரகாஷை ஏன் கைது செய்யவில்லை" என்று ஓர் உறுப்பினர் கேட்டதற்கு பிரும்மானந்த ரெட்டி பதிலளிக்கையில் "அது வேறு விஷயம்" என்றார்.

# நீதிமன்றத்தில் ரூ. 2,300 திருட்டு

பாண்டிச்சேரி, ஏப். 9— நீதிமன்றத்தில் ரூ. 2 ஆயிரம் மதிப்புள்ள கெடிகாரம், காமிரா முதலிய பொருள்களும் ரூ. 300 ரொக்கமும் திருட்டுப் போய்விட்டன. இந்தச் சம்பவம் பாண்டிச்சேரி சப்டிவிஷனல் ஜூடிஷியல் மாஜிஸ்டிரேட்கோர்ட்டில் நடந்துள்ளது.

இவை பறிமுதல் செய்யப்பட்ட சொத்துக்கள். தலைமைக் குமாஸ்தாவின் மேஜையில் வைக்கப்பட்டிருந்தன. நீதி மன்றத்தைத் திறந்தபோது பூட்டு உடைக்கப்பட்டுக் கிடப்பதையும், திருட்டு போயிருப்பதையும் கண்டு பிடித்தனர்.

இதுகுறித்து போலீசார் விசாரணை செய்துவருகின்றனர்.

‘சோவியத்து நாட்டில் குழந்தைகள்’ (16)

# ஈடு இணையற்ற நாடு

பேராசிரியர் சு. ந. சொக்கலிங்கம், எம். ஏ.,
(மேலாண்மை இயக்குநர், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை)

### தன் குழந்தையைக் கொண்டாடல்

குழந்தைகளை நாம் குல தெய்வம் போல் எண்ணிக் கொண்டாடுகிறோம். குடி விளங்க வந்த குலவிளக்காய் எண்ணியெண்ணி மகிழ்கிறோம். ஏதேதோ சொல்லிச் சொல்லி புகழ்கிறோம். குழந்தைகளின் கொஞ்சு மொழிக் கேட்கும்போது குழலிசையை விஞ்சுகிறதே என வியக்கிறோம். குழந்தைகளின் நளினமான நடையைக் காணும்போது நாட்டியம் என்கிறோம்; குழந்தைகள் பொக்கை வாய்திறந்து சிரிக்கும் போதே பூரித்துப் போகிறோம்; வாரி எடுத்து முத்த மாரி பொழிகிறோம்; ‘கட்டிக் கரும்பே! கட்டாணி முத்தே! குளிர் நிலவே! கோலமலரே!’ எனக் கொஞ்சி மனங் குளிர்கிறோம்.

“இன்பக் கதைகளெல்லாம் —
உன்னைப்போல்
ஏடுகள் சொல்வதுண்டோ?
அன்பு தருவதிலே—
உனைநேர்
ஆகுமோ
தெய்வமுண்டோ?
எனப்பாடி மகிழ்கிறோம்.

ஆம்? நம் சொந்தக் குழந்தைகளைக் காணும்போது மட்டுமே இப்படியெல்லாம் நடந்துகொள்கிறோம். இது இயற்கை.

### பிறர் குழந்தையைப் புறக்கணித்தல்

ஆனால், நம் குழந்தைகளை போலவே மற்றக் குழந்தைகளும் என எண்ணும் மனப் பக்குவம் நம்மிடம் இருக்கிறதா என்று நெஞ்சில் கை வைத்துக் கேட்டால் ‘இல்லை’ என்ற விடையே கிடைக்கும். தங்கள் குழந்தைகளைத் தவிர மற்றவர் குழந்தைகளை குழந்தைகளாகவே மதிக்காத காரணத்தினால் தான் நாடெங்கும் இலட்சக்கணக்கான குழந்தைகள் பிச்சை எடுத்துப் பிழைக்கின்றனர்; எச்சில் சோற்றுக்கு நாயோடும் பன்றியோடும் போராட்டம் நடத்துகின்றனர்; சாலை ஓரத்திலும் சாக்கடை நாற்றத்திலும் படுத்துறங்குகின்றனர்.

“ஊரார் பிள்ளையை
ஊட்டி வளர்த்தால்
தன்பிள்ளை தானே வளரும்”
என்று தத்துவம் பேசுவோர் எண்ணிக்கைக்குக் குறைவில்லை. ஆனால், பக்கத்து வீட்டிலிருக்குப் ஏழைப் பெற்றோரின் குழந்தைகள் குடிக்கக் கூழின்றி, பசி தணிக்கச் சோறின்றி வீரிட்டழும்போது சன்னற் கதவுகளை இழுத்துப் படாரென்று சாத்தி

“தன்பெண்டு தன்பிள்ளை
சோறு வீடு
சம்பாத்யம் இவையுண்டு
தானுண்டு”
என வாழுகின்ற நிலையையே காணுகின்றோம். அவர்களுடைய முரண்பட்ட போக்கைக்கண்டு மனம் நாணுகின்றோம்.

### சோவியத்து நாட்டு நிலை

சோவியத்து நாட்டு மக்களோர் சொந்தக் குழந்தைகளை நடத்துவது போலவே மற்றக் குழந்தைகளையும் நடத்துகின்றனர். “சேய் நல ஆய்வுரை மையங்கள்” குழந்தை வளர்ப்பு நிலையங்கள், தோட்டப் பள்ளிகள் ஆகிய இடங்களில் பணி புரிவோர் பிறர் குழந்தைகளைத் தங்கள் குழந்தைகளாகவே கருதிப் பேணுகின்றனர். தம் குழந்தைகளாக மதித்துநடத்தும் மனப் பக்குவத்தை, பண்பாட்டைப் பெரும்பான்மையோர் பெற்றுள்ளனர் என என்னால் துணிந்து கூறமுடியும். அந்த மனப் பக்குவமும் பண்பும் சோவியத்து மக்களிடம் இருப்பதால் தான் அந்நாட்டில் அநாதைக் குழந்தைகளைப் பலர் தங்கள் குடும்பத்தில் வைத்துத் தங்கள் குழந்தைகள் போலவே வளர்க்கின்றனர்; பெற்றோரை இழந்த அந்தக் குழந்தைகளுக்குப் பேராதரவாய் விளங்குகின்றனர்.

### அநாதைக் குழந்தைகளை ஆதரித்தல்

அநாதைக் குழந்தைகளை எடுத்துவளர்ப்பதற்குச்சோவியத்து அரசு நிதியுதவி வழங்குகின்றது. ஆனால் அந்நாட்டு மக்கள் அந்த உதவித் தொகைக்கு ஆசைப்பட்டு அநாதைக் குழந்தைகளை எடுத்துத்கௌஸிராமன் பூனை வளர்த்ததுபோல் வளர்க்கவில்லை. மனிதப் பண்பின் காரணமாகவும் குழந்தைச் செல்வத்தின் சிறப்பை உண்மையாகவே உணர்ந்த காரணத்தாலுமே அநாதைக் குழந்தைகளை எடுத்து அன்புடன் வளர்க்கின்றனர். பலர் அந்த அநாதைக் குழந்தைகளையே பின்னர் தத்துமெடுத்துக்கொள்கின்றனர். அந்த அளவுக்கு அங்குள்ள அரசும் பொதுமக்களும் குழந்தைகளை மதிப்பதால்தான் அந்நாட்டில் அநாதைக் குழந்தைகள் சந்திகளிலும், சதுக்கங்களிலும், சாலைகளிலும், மூலைகளிலும், வீட்டுவாயில்களிலும், வீதிகளிலும் நின்று பிச்சை வாங்கி வயிற்றை வளர்க்கவில்லை.

சோவியத்து நாட்டில் ஜார் ஆண்ட காலத்திலே அங்கு சுமார் 25 லட்சம் குழந்தைகள் அநாதைகளாக தெருக்களில் திரிந்தன. இன்றோ அநாதைக் குழந்தைகள் குறைந்து விட்டன என்பதோடு அநாதைக் குழந்தைகளுக்காக நாடு பூராவலும் இல்லங்கள் உள்ளன. அநாதை குழந்தைகளை எடுத்து வளர்க்க அரசு நிதி உதவி வழங்குகிறது.

### அநாதை இல்லங்கள்

ஜார் ஆண்ட காலத்திலே அங்குச் சுமார் 25 லட்சம் குழந்தைகள் அநாதைகளாக வீதிகளிலே திரிந்தார்களாம். ஆம், ஆடு மாடுகளைப்போல், நாய்பன்றிகளைப்போல் அலைந்தார்களாம். நிலை குலைந்தார்களாம். முதலாவது, இரண்டாவது போர்களுக்குப் பின்னரும் இலட்சக் கணக்கான குழந்தைகள் தங்கள் பெற்றோரையும், உற்றோரையும் உடைமைகளையும் இழந்து, வயிற்றுக்கு உணவின்றி, வாழவதற்கு வகையின்றி, ‘தாழ்வுற்று வறுமை மிஞ்சி’, நாடெங்கும் நாடோடிகளாய் நாதியற்றவர்களாய்த்திரிந்தார்களாம். இன்றோ அநாதைக் குழந்தைகளின் எண்ணிக்கையும் குறைந்துவிட்டது. அவர்களுக்காக நாடு முழுவதிலும் பல அநாதை இல்லங்களும் இயங்குகின்றன. அவற்றை அரசே நடத்துகின்றது. அந்த அநாதை இல்லங்களிலே அநாதைக் குழந்தைகள் அனைத்துவசதிகளையும்பெற்று வாழ்வதோடு தாயன்பையும் பெற்று மகிழ்கின்றனர். அவர்களுடைய உடைக்கும், உணவுக்கும், கல்விக்கும், மருத்துவத்திற்கும் அரசே பொருதவி புரிகின்றது. அநாதைக் குழந்தைகள் தாங்கள் அநாதை என்பதையேமறந்து மன நிறைவுடன் வாழ்கின்றனர்.

### எல்லாக் குழந்தைகளும் சமம்

குழந்தைகளாக இருந்து விட்டால் போதும். அவர்கள் யார் பெற்ற குழந்தைகளாக இருப்பினும் கவலையில்லை. அவர்கள் குழந்தைகளே. முறைகேடாகப் பிறந்த குழந்தைகள் என்ற பெரும் பழிக்கும் இழிவுக்கும் ஆளாகும் குழந்தைகள் அங்கு இல்லை என்பதை அறிந்த போது நானடைந்த வியப்புக்கு எல்லையே இல்லை. சோவியத்து மண்ணில் பிறக்கும் குழந்தைகள் அனைவருமே முறையாகப் பிறந்த குழந்தைகளாகவே கருதப்படுகின்றனர். இந்தப் பரந்து விரிந்த பண்பட்ட மனப்பாங்கை வேறெங்கும் காணவே முடியாது. அனைத்திலும் சமதருமத்தைக் காணும் சோவியத்து ஒன்றியம் இதிலும் சமதருமத்தைக் காண்பது நமக்கு வியப்பையே அளிக்கிறது.

### சீர்திருத்தச் செம்மல் லெனின்

சோவியத்து மக்களின் தன்னேரில்லாத் தலைவர் லெனின் சிந்தித்துச் செயல்படாத ஒரு முக்கியமான துறையே இல்லை எனலாம். அவர் புரட்சித் தலைவர் மட்டும் அல்லர்; அரசியல், சமுதாயம், பொருளாதாரம் அனைத்தைப் பற்றியும் தெளிவாய் அறிந்தவர்; தீர்க்க தரிசனம் நிறைந்தவர்; கூர்த்த மதியுடையவர். ஜாரின் பேர் கெட்டுக்கிடந்தது போலவே அந்நாட்டில் அனைத்தும் சீர் கெட்டுக் கிடந்தன. அவை அனைத்தையும் செம்மைப் படுத்த, சீர்திருத்தச் செம்மல் லெனினின் சிந்தனை அறிவே உதவிற்று.

### சிறந்தவை அனைத்தும் குழந்தைகளுக்கு

வருங்கால வரலாற்றைப் படைக்கும் உரிமை படைத்தவர்கள் குழந்தைகள் என்பதை லெனின் நன்கு உணர்ந்திருந்தார். அதனால்தான் “சிறந்தவை அனைத்துமே குழந்தைகளுக்குக் கிடைக்க வேண்டும்” என அவர் தமது கருத்தைத் தெளிவாய்த்தெரிவித்தார். அவர் விரும்பியது வீணாகவில்லை. அவர் விளம்பியதைப் போலவே இன்று அந்நாட்டில் “சிறந்தவை அனைத்தும்” குழந்தைகளுக்குக் கிடைக்கின்றன.

### குழந்தை உலகம்

குழந்தைகளுக்கான ‘குட்டி உலகம்’ ஒன்றையே அந்நாட்டில் உருவாக்கியுள்ளனர் எனினும் அது மிகையாகாது. அந்நாட்டில் சலுகைபெறும் ஓரேயொரு “வர்க்கம்” குழந்தைகளேயாகும். முதலாளி ‘வர்க்கத்திற்கு’ மூடுவிழா நடத்திய சோவியத்து மக்கள் “குழந்தைகள் வர்க்கத்திற்கு”ப் பல சலுகைகளைவழங்கியுள்ளனர். குழந்தைகளிடம் அந்நாட்டு மக்கள் அளவற்ற அன்பைப் பொழிகின்றனர் என்பதை எடுத்துக் காட்ட இது வொன்றே போதும்.

### குழந்தைகளுக்கு தனியமைப்புகள்

குழந்தைகளுக்கெனத் தனியாகக் கழகங்களும், கலையரங்குகளும் விளையாட்டு வசதிகளும், நூலகங்களும், மருத்துவ நிலையங்களும்நிறுவப்பட்டுள்ளதைப் போலவே வேறு பல வசதிகளையும் செய்து கொடுத்துள்ளனர். குழந்தைகளுக்கெனப் பழங்கள், பல வகை மிட்டாய்கள், பிஸ்கோத்துகள் போன்றவையும் தனித்தனி கடைகளில் விற்கப்படுகின்றன. குழந்தைகளுக்கெனப் புத்தகங்களும் விளையாட்டுப் பொருள்களும் விற்பதற்கென்றே தனித்தனி கடைகள் அந்நாட்டில் இருக்கின்றன.

### கூடிவாழ வழிகாட்டுதல்

நன்றிகெட்ட மக்களைப் பற்றிச் சீனப் பழமொழி ஒன்று மிக நன்றாகக் கூறுகிறது. “நன்றிகெட்ட மகன் தந்தையின் முகத்திலே தோன்றிய முகப்பரு. முகப்பருவைக் கிள்ளினாலோ வலிக்கும்; அப்படியே விட்டுவிட்டாலோ முகத்தை அவலட்சணமாக்கும், என்பதே அந்த பழமொழி.

இத்தகையமுறையில்வளரும் குழந்தைகளால் நாட்டுக்கு என்ன நன்மை விளைந்திட முடியும்? சலுகைகளைக் காட்டினாலும் சமுதாயத்தோடு ஊரோடு உலகத்தோடு ஒட்டி வாழத்தெரியும் வகையிலே சலுகைகளைக் காட்ட வேண்டும், நெஞ்சில் அன்பையும் கூடி வாழும் உணர்வையும் ஊட்டவேண்டும். அப்போதுதான்குழந்தைகள் சிறந்த குடிமக்களாக வளர முடியும். வாழமுடியும். ஜாரின் சர்வாதிகாரத்திற்குச் சாவுமணியடித்த சோவியத்து மக்கள் தங்கள் குழந்தைகளைக் குவலயமே போற்றி மதிக்கும் சிறந்த குடிமக்களாக வளர்ப்பதிலே அளவு கடந்த கவனம் செலுத்துகின்றனர். “கூடி வாழ்ந்தால் கோடி நன்மை” என்பது பழமொழி. அதை அந்நாடு செயலில் காட்டுகிறது. தனியுடைமைக் கொடுமைகளைத் தகர்த்துத் தவிடுபொடியாக்கிப் பொதுவுடைமையை நிறுவியுள்ள சோவியத்து நாடு “கூடிவாழ வேண்டும்” என்னும் ஒப்பற்ற உயர்தத்துவத்தைத் தோட்டப்பள்ளியிலிருந்தே போதிக்கிறது. குழந்தைகள் கூடி விளையாடவும் கலந்துரையாடவும் கூடிச் செயலாற்றவும் பயிற்சி தருகிறது.

மத்திய அரசுக்கு கருணாநிதி கோரிக்கை

# “வறட்சி நிதியை அடுத்த திட்ட ஒதுக்கீட்டில் கழித்துக் கொள்ளலாம்”

சென்னை, ஏப். 9—வறட்சி நிவாரணப் பணிகளுக்காக தமிழகத்துக்கு மத்திய அரசு அளித்த நிதி உதவியை ஆருவது ஐந்தாண்டுத் திட்டத்தில்கழித்துக் கொள்ளலாம் என்று சட்டசபையில் முதலமைச்சர் கருணாநிதி கூறினர்.

76 தேர்தலில் யார் ஆட்சிக்கு வந்தாலும் சரி, அடுத்த அரசுக்கு வேதனையை ஏற்படுத்தக் கூடாது என்பதற்காகத்தான் இதைக் கூறுகிறோம் என்றார் அவர்.

மாநில ஆயத்தீர்வை, தேர்தல்கள், மாநில ஆட்சித் தலைவர், அமைச்சர்கள், தலைமையிடப் பணிகள், இயற்கையின் சீற்றங்கள் குறித்த துயர் தவிர்ப்பு பணிகள் ஒய்வு ஊதியங்கள், இழப்பீடுகள் மாநில அரசின் கடன்முதலான பல இனங்களுக்கான மானியக் கோரிக்கைகள் மீது விவாதம் நடந்தது. விவாதத்துக்குமுதல்வர் கருணாநிதி பதிலளித்துப் பேசினர்.

முதல் அமைச்சர் கருணாநிதி கூறியதாவது:

மாவட்டங்களில் அமைச்சர்கள் அதிகமான சுற்றுப் பயணத்தை மேற்கொள்ள வேண்டுமென்று சுப்பையா சொன்னர். சென்னையில் தான் அதிக நாள் இருக்க வேண்டும் என்று பொன்னப்ப நாடார் சொன்னர் சென்ற ஆண்டு பல அமைச்சர்களும் 200 நாட்களுக்கு மேல் சென்னையிலேயே தங்கியிருக்கிறர்கள்.

### வாக்காளர் பதிவு

வாக்காளர் பதிவு செய்யப்பட்டதில் மத்திய தேர்தல் குழுகட்டளைப்படி வாக்காளர் பட்டியலை அவசரமாகத் தயாரித்தோம். ஏற்கனவே 1-10-75 க்குள் வாக்காளர் பட்டியலில் தயாரித்து முடிக்கலாம் என்று நாம் யோசனை கூறினோம். மத்திய தேர்தல் குழு 10-6-75க்குள் தயாரித்து முடிக்கவேண்டுமென்று ஆணையிட்டது. ஆனால் திடீரென 28-12-74 அன்று 1975 பிப்ரவரி 28க்குள் வாக்காளர் பட்டியலை தயாரித்து முடிக்க வேண்டுமென்று மத்திய தேர்தல் குழு ஆணையிட்டது. அதன்படி அவசரமாக அந்த வேலை மேற்கொள்ளப்பட்டது. இதில் நாம் அவசரம் காட்டவில்லை. அப்படி தயாரிக்கப்பட்டதில் 71ம் ஆண்டைவிட 18½ சதவிகிதம் அதிகமான வாக்காளர்கள் பதிவாகியிருக்கிறர்கள்.

### தேர்தலுக்கு தயார்

பொன்னப்பநாடார் (ப. காங்கிரஸ்): தேர்தல் எப்போது என்ற தகவல் அரசிற்கு வந்திருக்கிறதா? திடீர் தேர்தல் நடந்தால் அதற்கு நாங்கள் எல்லாம் தயாராய் இருப்போம்.

முதல்வர்: உங்கள் நிலையில் தான் நாங்களும் இருக்கிறோம்.

### மதுவிலக்கு

மதுவிலக்குபற்றி பலரும் பாராட்டிப் பேசினர். குற்றங்களைக் கண்டுபிடிக்கும் சிறப்புக் காவல்துறையினர் நல்ல முறையில் செயல்பட வேண்டும் என்று கூறினர்கள். மதுவிலக்கு அமுலுக்கு வந்து 1-9-74 முதல் 28-2-75 வரை 2 லட்சத்து 3 ஆயிரத்து 256 பேர் மீது வழக்கு தொடரப் பட்டிருக்கிறது. 21, 202 பேர் சிறையில் அடைக்கப்பட்டிருக்கின்றனர் அபராதம் விதிக்கப்பட்டதன் மூலம் 52 லட்சம் ரூபாய் வருமானம் வந்திருக்கிறது.

மதுவிலக்கு முழுவதும வெற்றி பெற வேண்டுமானல் அதை ஒரு அகில இந்திய கொள்கையாக மாற்றி எல்லா மாநிலங்களும் ஏற்றுக் கொண்டால் தான் தமிழ்நாட்டில் வெற்றி பெற முடியும்.

### இந்தி எதிர்ப்பு வீரருக்கு மான்யம்

ஓய்வு ஊதியம் பெறுபவர்களுக்கு நாம் பல சலுகைகளை அளித்து இருக்கிறோம். இந்தி எதிர்ப்பு வீரர்களுக்கும், மான்யம் கொடுத்து வருகிறோம், 1965ல் பல்லாயிரக் கணக்கானோர் இரண்டுமூன்று மாதம் சிறையில் வைக்கப் பட்டு பதிவு செய்யப்படாமல் விடுவிக்கப்பட்டிருக்கிறர்கள்.

வீராசாமி (திமுக):— விடுதலை வீரர்கள் சிறையில் இருந்திருந்தால் எம். எல். ஏக்களோ தலைவர்களோ சான்றிதழ் அளித்தால் ஏற்றுக் கொள்ளப்படுவதுபோல இந்தி எதிர்ப்புப் போராட்ட வீரர்களுக்கும் எம். எல். ஏக்களோ அமைச்சர்களோ சான்றிதழ் தந்தால் போதுமா?

சீனிவாசன் (அதிமுக): இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் பல மாணவர்களுக்குப் பாதிப்பு ஏற்பட்டிருக்கிறது. அப்படி பட்டவர்களுக்கு, உத்தியோகத்தில் சலுகை காட்டப்படுமா?

கோவை செழியன் (அ. தி மு க): 1952-ல் இந்தி எதிர்ப்பில் ஈடுபட்டவர்களை இதில் சேர்க்க அரசு முன் வருமா?

முதல்வர்:—1938 முதல் ஈடுபட்டவர்களும் சேர்க்கப் படுவர். சட்டமன்ற உறுப்பினர்கள் நற்சான்றிதழ் கொடுத்தாலும் அதை பரிசிலனை செய்துதான் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

சட்ட மன்ற உறுப்பினர்கள் நற்சான்று கொடுப்பதை ஏற்றுக் கொண்டால் அவர்கள் பாடு பெரிய பாடாகி விடும்.

### வறட்சி நிவாரணம

வறட்சி நிவாரணத்திற்காக 20 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது. வறட்சி நிவாரணத்திற்காக மத்திய அரசு ஏற்படுத்திய தேசிய நிதியை பல மாநிலங்களும் எதிர்த்தது ஒவ்வொரு மாநிலமும் இதற்கு எப்படி நிதி திரட்டுவது, எப்படி பிரித்து எடுப்பது என்பதில் சிரமம் ஏற்படும் என்று கருதித் தான அதை எதிர்த்தோம்.

### மத்திய உதவி

6-வது நிதி குழு மாநிலங்களை கலந்து முடிவு எடுப்பதில்லை. 1969 முதல் 73 வரை இயற்கையின் சீற்றத்தை தணிக்க மராட்டியத்திற்கு ரூ. 108 கோடி, ராஜஸ்தானுக்கு ரூ. 91 கோடி, ஆந்திரத்திற்கு ரூ. 82 கோடி மேற்கு வங்கத்துக்கு ரூ. 52 கோடி குஜராத்திற்கு ரூ. 43 கோடி பீஹாருக்கு ரூ. 37 கோடி கொடுத்த மத்திய அரசு தமிழகத்திற்கு ரூ. 17 கோடிதான் கொடுத்தது. அங்கே அதிகம், இங்கே குறைவு என்ற சர்ச்சைக்கு நான் போகவில்லை. இதை திட்டத்தில் கழிப்பது சரியல்ல. என்பதுதான் நம்முடைய வாதம்.

மற்ற மாநிலங்களில் ஒரே கட்சி ஆட்சி நடப்பதால் மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் திணறுகிறர்கள்.

### சி. எஸ். விவகாரம்

சி. சுப்பிரமணியம் நிதி மந்திரியாக இருக்கும்வரை பணம் வாங்கமாட்டோம் என்று சொன்னதில் இருந்து மாறி நிபந்தனை விதிக்கிறேன் என்று சொல்வது சரியல்ல, முதலில் கணக்குப் பார்த்துவிட்டுத்தான் பணம் தருவோம் என்று சொன்ன சி. சுப்ரமணியம் தன்னுடைய ஒரு மாத சம்பளத்தை வறட்சி நிவாரண நிதிக்கு கொடுத்தார்.

பிறகு வறட்சி பகுதிகளை சுற்றுப் பார்த்து விட்டு வந்து வறட்சி பணிகளை பாராட்டியிருக்கிறர். திட்டத்தில் இருந்து கழிக்கக்கூடாது என்ற நம்முடைய வாதம் சி. எஸ். பிரச்னைக்கு பிறகு வரவில்லை.

### பின்னர் கழித்து கொள்ளலாம்

இந்த ஆண்டுநிதி நிலை அறிக்கையை மார்ச் முதல் தேதி நான் தாக்கல் செய்தபோது அதில் நான் தெளிவாக சொல்லியிருக்கிறேன். 5வது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதை கழிக்கக்கூடாது என்று சொல்லியிருக்கிறேன். வேண்டுமானல் 6வது 5 ஆண்டு திட்டத்தில் கழித்துக்கொள்ளலாம் என்பதை கவர்னரிடமும் சொன்னேன். அவரும் அங்கே இதை பிரதிபலித்து இருக்கிறர். 76ல் நாங்கள் ஆட்சிக்கு வரலாம். அல்லது காங்கிரஸ்ஆட்சிக்கு வரலாம். அல்லது யார் யார் அமைச்சர்கள் என்று இப்போதே சொல்லிவருகிற கட்சி ஆட்சிக்கு வரலாம். அப்படி வரும்போது புதிய ஆட்சிக்கு தொல்லை ஏற்படுத்திவிட்டு போக நாங்கள் விரும்பவில்லை அடுத்த ஆண்டு திட்டத் தொகையில் கழித்தால் 76-77 ஆண்டு திட்டங்களில் சங்கடம் ஏற்படும். புதிய அரசுக்கு வேதனையை உண்டாக்கும் துன்பகரமான நிலையை மனதில் வைத்துத் தான் இதைச் சொல்லுகிறோம்.

மற்ற மாநிலங்களும் நம்முடைய கோரிக்கையை ஆதரித்து வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலும் ஆருவது திட்டத்தில் கழிக்கும் யோசனையை மனதாரப் பாராட்டுவார்கள்.

அனந்தநாயகி (புது காங்): மற்ற மாநிலங்கள் பஞ்சப் பகுதி என்று பிரகடனப் படுத்தினர்கள். நாம் அது போலச் செய்யவில்லை. சில சில இடங்களை தான் அறிவித்து இருக்கிறோம்.

முதல்வர்:— ஒரு சட்ட மன்ற உறுப்பினர் இப்படிச் சொல்வது சரியல்ல. 11 ஆயிரம்கிராமங்களைவறட்சி பகுதிகளாக அறிவித்திருக்கிறோம்.

அமைச்சர் அன்பில் தர்மலிங்கம்:—76 ஆயிரம் கிராமங்களில் 51 ஆயிரம் கிராமங்கள் வறட்சிப் பகுதிகளாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

அனந்தநாயகி (புது காங்): இதில் எந்த கணக்கு சரியானது?

அமைச்சர் அன்பில் தர்மலிங்கம்: தமிழகத்திலுள்ள 76 ஆயிரம் கிராமங்களில் 51 ஆயிரம்கிராமங்கள் வறட்சியால் பாதிக்கப்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

### கிடைப்பதை பெறலாமே?

சீனிவாசன் (அ. தி. மு.க.): இப்போது கிடைப்பதைப் பெற்றுக்கொண்டு திட்டத்திற்காக பிறகு ஏன் கேட்டுப் பெறக்கூடாது.

முதல்வர்: வறட்சிப் பணிகளுக்காக நிதி கொடுத்து விட்டு ரகசியமாகத் திட்டத்தில் கழித்துக் கொள்ளுகிறர்கள்.

சீனிவாசன் (அதிமுக): திட்டத்திற்கான பணத்தை பிறகு போராடி பெறலாமே?

முதல்வர்: மத்திய அரசு நம்முடைய கோரிக்கையை ஏற்கக்கூடும் என்றநிலை இருக்கிறது. அதற்கு பாதமாக நம்முடைய பேச்சுகள், இருக்கக்கூடாது.

கோவை செழியன் (அ. தி. மு. க.): இப்போது நம்முடைய அவசர தேவைக்கு வாங்கிக்கொண்டு பிறகு சண்டைப் போட்டால் என்ன?

முதல்வர்: இதுதான் அண்ணா தி. மு. க. கொள்கையாகும். இப்போது கிடைத்ததை வாங்கிக்கொண்டு பிறகு ஏமாற்றலாம் என்பது சரியா?

முதலமைச்சர் பேசியபிறகு மான்யக் கோரிக்கைகள் நிறைவேறின.

நாகப்பட்டினம்

## நகரசபை ப. காங்கிரஸ் உறுப்பினர் ராஜினுமா

நாகை, ஏப். 9—நாகப்பட்டினம் நகரசபையிலிருந்து 2-வது வார்டு கவுன்சிலர் ராஜினமா செய்து விட்டார், நாகை இரண்டாவது வார்டு கவுன்சிலர் டி. எஸ். சிவசங்கரம் பிள்ளை இவர் கடந்த 16 வருடங்களாக நாகை நகரசபையில் கவுன்சிலராக இருந்து வருகிறர்.

இவர் தனது கவுன்சிலர் பதவியை ராஜினமா செய்து விட்டதாக நகரசபை தலைவர் எஸ். எம். ரங்கசாமிக்கு கடிதம் அனுப்பி உள்ளார்.

இவரது ராஜினமாவை நகரசபை ஏற்றுக் கொண்டது.

ராஜினமாவிற்கு காரணம் என்னவென்று தெரியவில்லை.

## தமிழ்நாடு வறட்சி நிவாரண நிதி

சென்னை, ஏப். 9—தமிழக முதல்வர் கருணாநிதி திரட்டும் தமிழ்நாடு வறட்சி நிவாரண நிதிக்கு 7-ம் தேதி வரையில் 45 லட்சத்து 82 ஆயிரத்து 969 ரூபாய் 74 காசுவசூலாகி உள்ளது.

# தேர்தல் கமிஷன் மத்திய அரசின் கைப்பாவை: முஸ்லிம் லீக் புகார்

சென்னை, ஏப். 9—தேர்தல் கமிஷன் மத்திய அரசின் கைப்பாவையாக இருக்கிறது என்று முஸ்லிம் லீக் உறுப்பினர் வகாப் சட்டசபையில் கூறினர்.

மேலும் அவர் பேசும்போது கூறியதாவது:—

தேர்தல் திடீரென்று வருமென்று சொல்லப்பட்டது. ஆனல், இப்போது தேர்தல் வருமா என்ற நிலை இருக்கிறது தேர்தல் கமிஷன் மத்திய அரசின கைப்பாவையாக இருக்கிறது. வடக்கே செல்வாக்கு குறைந்து வருவதால் ஒத்திவைக்கிறர்கள். தேர்தல் எப்போது நடத்துவது என்பது குறித்து பிரதமர் ஜோசியம் பார்ப்பதாக சொல்லப்பட்டது. இப்போது தேர்தலை நடத்தினுல் பாதகம் ஏற்படும் என்ற ஜோசியம் சொன்ன ஜோசியரே சொல்லியிருக்கிறர். இந்த நாடே ஜோசியத்திற்கு அடிமையாகி விடுமோ? என்ற அச்சம் ஏற்பட்டிருக்கிறது. வாக்காளர்களின் வயதை 18 வயதாக குறைப்பது சரியல்ல.

இப்போது இருக்கும் 21 வயதே இருக்க வேண்டும். எம். பி.களாக எம். எல். ஏ.க்களாக வருவதற்கு தேர்தலில் நிற்க குறைந்த பட்சம் எஸ். எஸ். எல். சி. படித்திருக்க வேண்டும். அதுபோல் நகராட்சி, ஊராட்சி தேர்தலில் நிற்க 8 வது படித்திருக்க வேண்டும் என்று தேர்தல் கமிஷனுக்கு நாம் சிபாரிசு செய்ய வேண்டும்.

வை. பாலசுந்தரம் (தி. மு. க.): இந்த சட்டசபை கோட்டை நமக்கு சொந்தமானது அல்ல. நாம் வாடகை கொடுப்பதாக அறிகிறேன். மத்திய அரசு இந்தக் கோட்டையையும் அதன் சுற்றுப் புறத்தையும் மாநில அரசுக்கு உட்பட்டதாக ஆக்கவேண்டும்.

என். கே. பழனிசாமி (கம்யூனிஸ்ட்):— பர்மிட்டுக்கு 50 ரூபாய் என்று ஆக்கினுல் லட்சக் கணக்கில் குடிக்க ஆரம்பித்து விடுவார்கள். இதைக் கவனிக்க வேண்டும்.

## இன்றைய சினிமா

**சென்னை**
ராம் — புது வெள்ளம்
நியூ எல்பின்ஸ்டன் — விலக்கப்பட்ட கனி
நேஷனல் — வெள்ளிக்கிழமை விரதம்
சராஸ் — ஆலய மணி

**பல்லாவரம்**
லக்ஷ்மி — பிஞ்சு மனம்

**தாம்பரம்**
நேஷனல்— உலகம் சுற்றும் வாலிபன்
எம். ஆர். தியேட்டர் — சொந்தங்கள் வாழ்க
ஸ்ரீ சித்ரா — ஜத்தார் (ஹிந்தி)

**வில்லிவாக்கம்**
ராயல்: — பட்டாம்பூச்சி

**நுரோம்பேட்டை**
வெற்றி: — கணவன் இல்லாத பெண் (தெலுங்கு) மனோகரா

**கொளத்தூர்**
ஸ்ரீ குமரன் — அவள் ஒரு தொடர் கதை

அரசாங்கப் பணியில் இருந்தபோது இறந்த மாவட்ட வேலைவாய்ப்பு அதிகாரியின் தாயாருக்கு 10 ஆயிரம் ரூபாய்க்கான காசோலையை சென்னையில் அமைச்சர் ராசாராம் வழங்கினர்.

# புதுவையில் மத்திய பல்கலைக்கழகம்

புதுடெல்லி, ஏப் 9—ஐந்தாவது திட்டக் காலத்தில் புதுவையில் மத்திய பல்கலைக்கழகம் ஒன்றைத் துவக்குவது என்று மத்திய அரசு முடிவு செய்துள்ளது.

இத்தகவல் பார்லிமென்டில் தெரிவிக்கப்பட்டது.

அனைவரும் சேர்ந்து படிப்பதற்கான மத்திய பல்கலைக்கழகம் ஒன்றை அமைப்பதற்கான திட்டம் ஒன்றும் பரிசீலனையில் இருப்பதாகத் தெரிவிக்கப்பட்டது.

காஷ்மீரில் மாநில அரசாங்கம் விவசாயப் பல்கலைக் கழகம் ஒன்று அமைக்கப்பட்டு வருகிறது. கோவா யூனியன் பிராந்தியத்தில் ஒரு பல்கலைக் கழகத்தை அமைக்கவும் உத்தேசம் உள்ளது.

# இரட்டித்து தருவதாக ரூ. 2 ஆயிரத்தை பறித்ததாக 2 பேர் கைது

பாண்டிச்சேரி, ஏப், 9—நோட்டை இரட்டித்துக் கொடுப்பதாகக் கூறி ஏமாற்றியதாக இரண்டு பேர் கைது செய்யப்பட்டனர்.

இவர்களும் மற்றும் சிலரும் சேர்ந்து நோட்டுகளை இரட்டித்துக் கொடுப்பதாகக் கூறி திண்டுக்கல் வணிகர் ஒருவரைத் தனியாக ஒரு ஒதுக்குப்புறத்துக்கு அழைத்துக் கொண்டு போனார்களாம். அங்கு அவரைத் தாக்கி ரூ. 2 ஆயிரம் ரொக்கத்தையும், ஒரு கைக்கெடிகாரத்தையும் பறித்துக் கொண்டார்களாம்.

# யாகத்தில் ஆடு பலியா? "தீக்குளிப்பேன்" இளைஞர் எச்சரிக்கை

கள்ளிக்கோட்டை, ஏப். 9—கேரளாவில் திருச்சூர் அருகே ரூ. 3 லட்ச செலவில் நடக்க இருக்கும் யாகத்தின்போது 12 ஆடுகள் பலியிடப்பட இருக்கின்றன. இதற்கு கடும் எதிர்ப்பு கிளம்பியுள்ளது.

யாகத்தின் போது ஆடுகளை வெட்டினல் தீக்குளிப்பேன் என்று ஏ எஸ்பாலன் என்பவர் எச்சரித்திருக்கிறார்.

யாகத்தில் ஆடுகளை பலியிடுவதற்கு ஜனசங்க கட்சியும் கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளது.

இந்து சமூகத்தைச் சேர்ந்த பல்வேறு தரப்பினரிடமிருந்தும் எதிர்ப்பு ஏற்பட்டுள்ளது.

இந்த யாகம் திருச்சூர் அருகே உள்ள பஞ்சோல் என்னுமிடத்தில் வருகிற சனிக்கிழமையிலிருந்து நடக்க இருக்கிறது. சர்வதேச வேத விற்பன்னர்கள் கமிட்டி ஒன்று இந்த யாகத்துக்கு ஏற்பாடு செய்துள்ளது.

## அரசுக்கு கோரிக்கை

கேரள அரசாங்கம் தலையிட்டு இந்த யாகத்தில் ஆடுகள் பலியிடப்படுவதைத் தடுக்கவேண்டுமென ஜனசங்க கட்சி கோரியுள்ளது.

இந்த யாகத்தை வெளி நாட்டார்கள் படம் பிடிப்பதையோ, டேப்ரிகார்ட் செல்வதையோ நாங்கள் எதிர்க்கவில்லை. ஆனால் இந்துக்களின் மனச்சாட்சிக்கு விரோதமான வகையில் ஆடுகள் பலியிடப்படுவதையே நாங்கள் எதிர்க்கிறோம் என்று மாநில ஜனசங்கத் தலைவர் ஓ. ராஜகோபால் கூறினர்.

கோயில்களிலும் விலங்குகளை பலியிடக் கூடாது என்று தடைச்சட்டமே உள்ளபோது பகிரங்கமாக உயிர்ப்பலி நடப்பதை அரசு எப்படி பார்த்துக் கொண்டிருக்கப் போகிறது என்று அவர் கேட்டார்.

ஆடுகளை பலியிட்டால் தீக்குளிக்கப் போவதாக அறிவித்துள்ள ஏ. எஸ். பாலன் ஜனசங்கத்தைச் சேர்ந்தவரல்ல என்றும் ஜனசங்கத் தலைவர் கூறினர்.

# சட்டசபையில் கருணாநிதி பேச்சு

1-ம் பக்கத் தொடர்ச்சி

தேவையில்லை. அவரே ராஜினாமா செய்துவிடுவார்.

நீங்கள் உத்தமர்கள்போலவும், தூய்மையானவர்கள் போலவும் ஏசுநாதர் பரம்பரைபோலவும்பேசுகிறீர்கள். திமுகவிலிருந்து உங்கள் கட்சிக்கு வரும் எம.எல். ஏக்களை நீதிவிசாரணை வைத்துதான் சேர்ப்போம் என்று எம ஜி. ஆர். சொன்னரே அப்படிச் செய்தாரா?

(தி. மு. க. வினர் பலமாக மேஜையை தட்டினர்கள்.)

கோவை செழியன்:- (அ தி மு க) முதல் அமைச்சருக்கு இவ்வளவு ஆத்திரம் வருவானேன்?

(இதற்கும் தி. மு. க.வினர் ஆட்சேபம் தெரிவித்தனர்)

ஆலடி அருணை (அதிமுக):- அமைச்சர் ப. உ. சண்முகம் ராஜினாமா செய்வது தான் ஆரோக்கிய ஜனநாயகத்திற்கு நல்லது.

முதலமைச்சர்:— ஆலடி அருணைதான் திட்டவட்டமாக தெளிவோடு குற்றசாட்டுகளைநேற்றுசொன்னர். இதற்கு முன்பு யாரும் அப்படிச் சொல்லவில்லை. அதையொட்டி நீதிவிசாரணைக்கு உத்தரவிடப்பட்டுள்ளது.

ஆலடி அருணை (அ. தி. மு. க.) நம்பக்கையில்லாத் தீர்மானத்தின்போது நான் பேசிய 27 நிமிடங்களிலும் ப. உ. சண்முகத்திற்கும்ஊழலுக்கும் சம்பந்தம் இருக்கிறது என்று சொல்லியிருக்கிறேன் என்னுடைய பழைய பேச்சை முதல்வர் படித்துப் பார்க்கட்டும்.

முதல்வர்: உங்களுடைய பழையபேச்சுக்களையெல்லாம் படித்துபார்த்துவிட்டு வேதனைப்பட்டுக்கொண்டு இருக்கின்றேன் (தி. மு. க வினர் "ஷேம் ஷேம் என்ற குரல்)

டாக்டர்ஹாண்டே (அ.தி. மு. க.): நாங்களும் இதுபோல ஷேம், ஷேம் என்று சொல்ல முடியும். அமைச்சர் ராஜினாமா செய்யவில்லையே? என்று நாங்களும் அதனை சொல்ல முடியும். இதை அனுமதிப்பது சரியா?

சபாநாயகர்: எந்த குரலும் இப்படி வரக்கூடாது.

## அரங்கண்ணல் கேள்வி

அரங்கண்ணல் (திமுக): மதிப்பீட்டுக்குழு அறிக்கையில் அமைச்சர் ப, உ. சண்முகத்திற்கு இதில் சம்மந்தம் இருக்கிறது என்று சொல்லி இருக்கிறதா?

எட்மண்ட் (அ தி மு க): மதிப்பீட்டு குழு அறிக்கையில் நேரடியாகச் சொல்லவில்லை. தாண்டவராயன் விவகாரத்தில் அமைச்சர் கையெழுத்திட்டிருக்கிறார். குற்றவாளி கூண்டில் நிறுத்தப்பட வேண்டியவர் எப்படி தொடர்ந்து மந்திரியாக இருக்கலாம்.

(திமுகவினர் இதற்கு பலத்த ஆட்சேபம் தெரிவித்தனர்.)

முதலமைச்சர் ஒரு ஒழுங்கு பிரச்னை எழுப்பி மதிப்பீட்டுக் குழு இந்த குற்றச்சாட்டை எங்கே சொல்லியிருக்கிறது? என்று கேட்டார்

## வெளி நடப்பு

எட்மண்ட்:— நேரடியாகச் சொல்லவில்லை. மறைமுகமாக உடந்தையாக இருந்திருக்கிறார். குற்றச்சாட்டுக்கு ஆதாரம் இருக்கிது. ஆனல் இதை ஏற்காதது விந்தையாக இருக்கிறது. இதை ஆட்சேபித்து நாங்கள் வெளிநடப்பு செய்கிறோம் என்று சொல்லி அவரும் அவரது கட்சியினரும் வெளிநடப்பு செய்தனர்.

முதல்வர்:— நீதி விசாரணை கேட்பார்கள், வைத்தால் ஓடுவார்கள். இதைவிட வேறு அத்தாட்சி தேவையில்லை. (திமுகவினர் பலத்த கைதட்டல்)

# தி. மு. கழகம் அகல் விளக்கு: மந்திரி நெடுஞ்செழியன் பேச்சு

சென்னை, ஏப். 9— 'தி. மு, கழகம் ஒரு அகல் விளக்கு, மத்தாப்பு அல்ல' என்று கல்வியமைச்சர் நெடுஞ்செழியன் கூறினர்.

சென்னை 73-வது வட்டத்தில் நடந்த தி. மு. கழக பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு அவர் பேசும்போது தெரிவித்ததாவது:

நாங்கள் எதிர்க்கட்சி வரிசையில் இருந்தபோது காங்கிரஸ் கட்சியினர் எங்களுக்கு எவ்வளவோ தொல்லைகளைக் கொடுத்துப் பார்த்தார்கள். பெரியாரை 15 முறை சிறையில் அடைத்து வைத்து இருந்தார்கள். அண்ணவை பல முறை சிறையில் அடைத்து வைத்திருந்தார்கள். தி. மு. கழகத்தில் இருக்கிற அத்தனை பேரையும் நான்கு மாதம், ஐந்து மாதம் என்று சிறையில் அடைத்து வைத்து இருந்தார்கள்.

நாங்கள் ஆட்சிப் பொறுப்பினை ஏற்ற கடந்த 8 ஆண்டு காலத்தில் மற்றவர்கள் எவ்வளவோ வன்முறை செயலில் ஈடுபட்டார்கள். உண்ணவிரதப் போராட்டம் நடத்தினலும் கள்ளுக்கடை மறியல் போராட்டம் நடத்தினலும் எந்தக் கட்சித் தலைவரையாவது 10 நாட்களுக்கு மேல் சிறையில் வைத்திருக்கிறோமா என்பதை நல்ல இதயம் படைத்தவர்களை கேட்க ஆசைப்படுகிறேன், காங்கிரஸ்காரர்கள் அதிகாரம் செலுத்துவதில்தான் கவனத்தைச் செலுத்திக்கொண்டு வந்தார்கள். ஆனல் நாங்கள் மக்களின் கருத்தை அறிந்து அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிற சங்கடங்களைப் போக்குவதில் நாம் கவனத்தைச் செலுத்திக்கொண்டு வருகின்றோம்.

## மக்களால்தான் முடியும்

நாங்கள் எதிர்க்கட்சியாக இருந்த நேரத்திலும் பணிகளை ஆற்றிக்கொண்டு வந்தோம். ஆளும் கட்சியானதற்குப் பிறகும் பணிகளை ஆற்றிக்கொண்டு வருகின்றோம். தேர்தலில் வெற்றித் தோல்வி என்பது சர்வசாதாரணமானது. மந்திரிப் பதவி எங்களுக்கு முடிந்த முடிவு அல்ல. நாங்கள் திருப்தியோடுதான் பதவியில் ஏறினோம். பதவியைவிட்டு கீழே இறங்கினலும் திருப்தியோடு தான் இறங்குவோம்.

மக்கள் மன்றம் நினைத்தால் எங்களைக் கீழே இறக்கலாமே தவிர தனிப்பட்ட ஆளோ அல்லது தனிப்பட்டகட்சியோ எங்களைச் சுலபத்தில் கீழே இறக்க முடியாது.

## அகல்விளக்கு மத்தாப்பு அல்ல

முன்னேற்றக் கழகம் ஒரு அகல்விளக்கு. அதுஎன்றென்றுமபயன்படுமஎரிந்துகொண்டிருக்கும பொழுது எண்ணெய் ஊற்ற ஊற்ற தொடர்ந்து எரிந்துகொண்டே இருக்கும. இருளைப் போக்கவும அது நமக்குப் பயன்படும ஆண்டு கணக்கில் அதைவைத்துக்கொண்டே நாம வாழ்நாளை கடத்தி விடலாம. பார்ப்பதற்கு அது கவர்சியாகக்கூட இருக்காது. ஆனல், மத்தாப்பு அப்படியல்ல. வானத்தில் மத்தாப்பு எரியும் போதுதான் அழகாகத்தான் இருக்கும். எரிந்து கீழே விழுந்தால் மறுபடியும் அதை ஏற்றி வைக்க முடியாது.

மத்தாப்பு மாதிரி இன்றைக்கு அரசியல்கள் சில உள்ளன.

காமராசராவது தியாகங்கள் செய்திருக்கிறார். கம்யூனிஸ்டுகளாவது எவ்வளவோ கஷ்நஷ்டங்களை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். நாட்டில் இவ்வளவு வறட்சி ஏற்பட்டிருக்கிற நிலையிலும் பெங்களூருக்குச் சென்று சினிமா படம் எடுக்கிற அளவுக்கு இருக்கிற ஒருவரை தலைமை தாங்கி நடத்துகிற கட்சியை நம்புவதா? அப்படி நம்புவதால் ஏற்படும் பின் விளைவுகளை நாடு தாங்கிக்கொள்ளவேண்டும்.

இவ்வாறு தி. மு. க.பொது செயலாளரும், கல்வியமைச்சருமான நெடுஞ்செழியன் பேசினர்.

வி. எஸ். கோவிந்தராஜன் திருவாரூர் தங்கராசு, ஆர். டி. சீதாபதி ஆகியோர் பேசினர்கள். ஏழுமலை தலைமை வகித்தார்.

சட்டசபையில் கருணாநிதி தகவல்

# தொழுநோய் பிச்சைக்காரர்களை பிடிக்க சட்ட திருத்தம்

சென்னை, ஏப். 9—சென்னை நகரில் உள்ள தொழுநோய் பிச்சைக்காரர்களை போலீசார் பிடிக்காமல் இருப்பது ஏன் என்று சட்டசபையில் அனந்தநாயகி கேட்டார். இதற்கு முதல்வர் பதிலளிக்கையில் தொழுநோய் பிச்சைக்காரர்களைப் பிடிப்பதற்கு சட்டத் திருத்தம் செய்வது பற்றி அரசு ஆலோசித்து வருகிறது என்றார்.

தொழுநோய் பிச்சைக்காரர்களுக்காக கட்டப்பட்ட விடுதிகளில் அவர்கள்தான் இருக்கிறார்களா அல்லது வேறு யாராவது இருக்கிறார்களா என்று அனந்தநாயகி சந்தேகம்தெரிவித்தபோது 'அம்மையார் வந்தால் அழைத்துப் போகச் சொல்கிறேன்' என்றும் முதல்வர் கருணாநிதி பதிலளித்தார்.

மீன்துறை, சமூக நலத் துறை மானியக் கோரிக்கைகள் மீது சட்டசபையில்விவாதம் நடந்தது.

## அனந்தநாயகி

அப்போது அனந்தநாயகி பேசியதாவது: சமுதாய நல திட்டத்தின்கீழ் இருக்கும் அமைப்புகள் சரியாக இயங்குகிறதா என்று கண்காணிக்க வேண்டும்.

மகளிர் மன்றங்கள் பெயரளவில்தான் இருக்கின்றன. தையல் மிஷின் யார் வீட்டிலோ தூங்கும். இந்ததுறையில் செலவழிக்கப்படும் பணம் சரியாக செலவிடப்படுகிறதா என்று பார்க்க வேண்டும்.

## தொழுநோய் பிச்சைக்காரர்கள்

சென்னை நகரில் இன்னமும் கோயில்வாசல்களில் தொழுநோய் பிச்சைக்காரர்கள் இருக்கிறார்கள். தொழுநோய் பிச்சைக்காரர்களுக்காக விடுதிகள் கட்டியிருப்பதாக சொல்லியிருக்கிறார்கள். ஆனல் சென்னை நகரில் உள்ள தொழுநோய் பிச்சைக்காரர்களைப் போலீசார் பிடிக்காமல் இருப்பது ஏன்? தலை நகரிலேயே இவ்வளவு பேர் இருந்தால் வெளியூர்களில் எத்தனை பேர் இருப்பார்கள். கட்டப்பட்டுள்ள விடுதிகளில் தொழுநோய் பிச்சைக்காரர்கள் இருக்கிறார்களா அல்லது வேறு யாராவது இருக்கிறார்களா?

## சட்டத் திருத்தம்

முதலமைச்சர் :— இன்றே நாம் இருவரும் பரணூர் சென்று பார்ப்போம் அங்கு இருக்கிற விடுதியில் தொழுநோய் பிச்சைக்காரர்கள் இருக்கிறார்களா? அல்லது வேறு யாராவது இருக்கிறார்களா என்று பார்க்கட்டும். அம்மையாா வந்தால் அழைத்துப் போக ஏற்பாடு செய்கிறேன் அங்கே தொழுநோய் பிச்சைக்காரர்கள் இருக்கிறார்கள். வெளியேயிருக்கும் தொழுநோய் பிச்சைக்காரர்களை பிடிப்பதற்கு சட்டத்தை திருத்த வேண்டும். இதற்கு அரசு ஆலோசித்து வருகிறது.

அனந்தநாயகி தொடர்ந்து பேசியதாவது :—தலைநகரிலேயே இவ்வளவு தொழுநோய் பிச்சைக்காரர்கள் இருப்பதால் அந்தவிடுதிகளில் யார் இருக்கிறார்கள் என்ற சந்தேகம் வருகிறது.

சத்துணவை கட்சி அடிப்படையில் மன்றங்களுக்கு கொடுப்பதால் அவைகளை குறைந்த விலைக்கு வெளியே விற்கிறார்கள். கொடுக்கப்படும்பாலும் இதே போல்தான் விற்கப்படுகிறது. அவைகளை மாதர் சங்கம மூலம வினியோகம செய்யவேண்டும.

## மியூசியத்தில் இருப்பது போல...

தமிழகத்தில் ஆயிரம மீட்டர் கடற்கரை உள்ளது மீன்பிடி துறைமுகங்கள்என்று இரண்டுதான் இருக்கிறது. அந்த மீன்பிடி துறைமுகங்களை அமைக்கவேண்டும. மீனவர்களுக்கு வழங்கப்பட்டுள்ள இயந்திர படகுகள் ஓடுவதில்லை. மியூசியத்தில் இருப்பதுபோல் இருக்கிறது. கையில் இருக்கிற பணத்தையும் அதில் போட்டுவிட்டு நடுதெருவில் நிற்கிறார்கள்.

ஏ. ராமலிங்கம் (தி மு க):- இயந்திர படகுகள் ஒன்றை கட்ட 1 லட்சத்து 20 ஆயிரம் ரூபாய் செலவு ஆகிறது. இதற்கு பதில் நாட்டு படகுகளுக்கு இயந்திரங்களை பொறுத்தி கொடுக்கலாம்.

## பெண்களுக்கு வேலை

வெங்கடசாமி (சுதந்திரா): மீன்வளத்தை நன்ருக பயன்படுத்தினல் உணவு பற்ருக்குறையை பெருமளவுக்கு தீர்க்கமுடியும் பெண்களை சரிசமமாக நடத்தவேண்டும் என்று நாம் கூறுகிறோம். ஆகையால் பெண்களுக்கு 50 சதவிகித வேலையை ஒதுக்கவேண்டும். வேலையில்லாததால் பெண்கள் வறுமையில் வாடிவிபச்சாரத்தில் ஈடுபடுகிறார்கள். கிராமத்தில் உள்ள குழந்தைகளுக்கு இலவசமாக சத்துணவு தர வேண்டும்.

சிவாஜி கணேசனின் 175-வது படமான 'அவன்தான் மனிதன்' வெளிவருவதையொட்டி சிறப்புக் கட்டுரை (நாளை) 10-ம் தேதி 'நவமணி' இதழில் இடம் பெறும்

# உலக பெண்கள் ஆண்டு வேலைத்திட்டம்?

புதுடெல்லி. ஏப். 9 —சம வேலைக்கு சம ஊதியத்தை உறுதி செய்யும் மசோதா விரைவில் நாடாளுமன்றத்தில் கொண்டுவரப்படுமென்று அரசு நம்புவதாக கல்வி மந்திரி பேராசிரியர் நூருல் ஹாசன் லோக்சபையில் தெரிவித்தார்.

1956ஆம் ஆண்டு விபசாரத் தடைச் சட்டத்தை இன்னும் பயனுள்ள வகையில் செயல்படுத்துவதற்கு சரியாகத் திருத்தங்கள் கொண்டு வரப்படுமென்றும், சட்டக் கமிஷனுடன் யோசனை கலந்து திருத்தங்கள் செய்யப்படுமென்றும் கூறினர். பெண்கள் அந்தஸ்தை உயர்த்துவதற்கான உத்தேச நடவடிக்கைகளில் புதுவை சில என்று நூருல் ஹசன் கூறினர். மகப்பேறு மருத்துவ பணிகள் அமைப்பது. மருத்துவ முறையில் கரு சிதைப்பு போன்ற சில திட்டங்கள் உலக மாதர் ஆண்டில் மேற்கொள்ளப்படும் என்றார்.

மத்திய மந்திரி தகவல்

# சிறு தொழிற்சாலைகள் வளர்ச்சிக்கு மத்திய அரசு ஊக்கம்

புதுடெல்லி, ஏப். 9—சிறு தொழிற்சாலைகளின் வளர்ச்சிக்கு மத்திய அரசு ஊக்கம் அளித்து வருவதாக மத்திய வர்த்தக மந்திரி டி. பி. சட்டோபாத்யாயா கூறினா.

டெல்லியில் நடந்த இளம தொழிலதிபர்களுக்கான தேசிய அமைப்பின் 8-வது கூட்டத்தில் அவர் பேசினர்.

அவா கூறியதாவது:—

சிறு தொழில்களை அபிவிருத்தி செய்வதில் மத்திய வர்த்தக இலாகா விசேஷ கவனம் செலுத்துகிறது. இதற்காக அவற்றுக்கு இயந்திரங்கள், தொழில் நுட்ப அறிவு முதலியவை அளிக்கப்படுகின்றன. வேலையில்லாத பொறியாளர்கள், முன்னள் ராணுவ வீரர்கள் ஆகியோர் சிறு தொழிற்சாலைகளை துவக்குவதற்காக விசேஷ திட்டமொன்று உள்ளது. தெரிந்தெடுக்கப்பட்ட பொருள்களின் ஏற்றுமதிக்காக சமஷ்டிகள் அமைக்க சிறு தொழில் நிறுவனங்கள் ஊக்குவிக்கப்படுகின்றன.

## இணைந்தே உள்ள பிரச்சினைகள்

விலைவாசியும் வேலைவாய்பு பிரச்சினையும இணைந்தே உள்ளன. நாட்டின் மக்கள் தொகை ஆண்டொன்றுககு 2 சலவகிதம வீதம அதிகரித்து வருமநிலையில் மேலுமமேலும தொழிலாளர்கள் தோனறுவார்கள். நாட்டில் சீரான வளர்ச்சி ஏற்பட்டால்தான இவர்களின் வேலைபிரச்னையை தீர்க்க முடியும். நாட்டின் பிற்பட்ட பகுதிகளில் அரசு வ்வசாயம் சார்ந்த தொழில்களின் வளர்ச்சியை ஊக்குவிக்கிறது.

நாட்டில் வேலையில்லாப் பிரச்னையைத் தீர்க்க தொழில் வர்த்தக வளர்ச்சிதான் வழி மேலும் மேலும் இளைஞர்கள் தொழில்களில் முனைய வேண்டும். இதனல் நாட்டில் உற்பத்தியும் அதிகரிக்கும், வேலையில்லாப் பிரச்னையும் தீரும் என்று சட்டோபாத்தியாயா கூறினர்.

# இந்து கோயிலுக்கு ஷேக் அப்துல்லா விஜயம்

ஜம்மு, ஏப. 9—ஜம்மு பிராந்தியத்திலுள்ளஒர் இந்து கோயிலுக்கு காஷ்மீர் முதல்வர் ஷேக் அப்துல்லா நேற்று முன்தினம விஜயமசெய்தார்.

இக்கோயில் வைஷ்ணே தேவியின் கோயிலாகும. இது 5200 அடி உயரத்தில் ஒரு குகையில் அமைந்துள்ளது

இக்கோயிலுக்கு காஷ்மீர் முதல்வர் ஒருவர் வருவது இதுவே முதல்தடவையாகும

# வன்னியர் படை அமைப்பு

சென்னை. ஏப். 9— வன்னியர்கள் தனிப்படை அமைக்கிறார்கள். இதற்கு வன்னியர் படை என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது. 6-ம் தேதி நடந்த தமிழ்நாடு உழைப்பாளர் பொது நலக்கட்சியின் செயற்குழு கூட்டத்தில் இந்த முடிவுஎடுக்கப்பட்டது. வன்னியர்களைப் பாதுகாக்க வன்னியர் படையை ஆங்காங்கு அமைப்பது, எங்கு வன்னியர்கள் பாதிக்கப்பட்டாலும் இந்தப் படை விரைந்து சென்று உதவும்.

வன்னியர் மாநிலம்அமைக்கவும் இந்தப் படை பாடுபடும் என அந்தக் கட்சி அறிவித்துள்ளது.

Printed by S. V. G. Sowriajulu at the M.C.P. P.S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Honorary Editor: N. Muthukumarasami.